# அன்பு மாலை

திருவண்ணாமலை
யோகி ஸ்ரீ ராம்சுரத்குமார் மீது பாடிய
பாடல்கள்

கி. வா. ஜகந்நாதன்

கிடைக்கும் இடம் :
'காந்தமலை'
2, நார்ட்டன் முதல் தெரு
சென்னை-600 028

1980

# அன்பு மாலை

திருவண்ணாமலை
யோகி ஸ்ரீ ராம்சுரத்குமார்மீது பாடிய
பாடல்கள்

கி. வா. ஜகந்நாதன்

கிடைக்கும் இடம் :

**காந்தமலை**

2, நார்ட்டன் முதல் தெரு

சென்னை-600 028



Yogi Ramsuratkumar
The Godchild — Tiruvannamalai

# முன்னுரை

அருளுருவாய்த் திருவண்ணுமலையில் எழுந்தருளி யிருக்கும் **யோகி ஸ்ரீ ராம்சுரத்குமார்** அவர்களைத் தரிசிக்கச் செல்லும்போதெல்லாம் வாய் மொழியாகவே பல பாடல்களைப் பாடுவது எளியேனது வழக்கம். அவற்றை அங்குள்ள அன்பர்கள் டேப் ரிகார்டரில் பதிவு செய்வார்கள்; அவற்றைப் படியெடுத்து எனக்கு அனுப்புவார்கள்.

முன்பு அவ்வாறு பாடிய பாடல்களையும் பேசிய சொற்பொழிவுகளையும் தொகுத்து '**ஜயந்தி மலர்**' என்ற பெயரில் வெளியிட்டேன். அதற்றின்பின்பு நான் பேசிய பேச்சையும் பாடிய பாடல்களையும் தொகுத்து '**அன்பு மாலை**' என்ற பெயரில் இப்போது வெளியிடும் வண்ணம் திருவருள் கூட்டுவித்தது. ''பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே?'' என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு.

முருகன் திருவருளாலும் சுவாமிகளுடைய கருணை யாலும் இந்தச் சிறு நூல் வெளியாகிறது. ''பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும், பத்தர் சொன்ன வும் பன்னப் பெறுபவோ?'' என்று கம்பரே சொல்லும் போது இந்த எளியேன் எம்மாத்திரம்?

*8—1—80* **கி. வா. ஜகந்நாதன்**

# சிற்றுரை

**(1—12—1978 ஸ்ரீ ஸ்வாமிகளின் ஜயந்தி விழாவில் தலைமை தாங்கி ஜயந்தி மலரை வெளியிடும்போது ஆற்றிய உரை.)**

---

வெளியிலிருந்து விழாக் கொண்டாடுவதைவிடவும், பெரிய கூடங்களிலிருந்து விழாக் கொண்டாடுவதைவிடவும், ஓர் அறையில் இருந்து, ஆண்டவனுடைய அருட்சின்னமான பெரியவர்களின் அருளைப் பெறுவதற்குரிய இந்த மணிவிழாவைக் கொண்டாடுகிற பாக்கியம் நமக்குக் கிடைத்திருக்கிறது. ஊரெல்லாம் கூடி ஒலிக்க நின்றாலும் நமக்கு உள்ளே பாயாது. யார் யார் பாக்கியம் பண்ணினவர்களோ அவர்கள் வந்திருக்கிறார்கள். மணிகளைப் போன்றவர்கள் வந்திருக்கிறார்கள். ஆண்மணிகள், பெண்மணிகள் இரண்டு மணிகளும் கொண்ட மணிவிழா இது.

இந்த விழாவில் ஒரு சிறிய கைங்கரியத்தைச் சுவாமிகள் எளியேனுக்குப் பணித்தார்கள். அவர்களைக் காணும் போதெல்லாம் சில செய்யுட்களை நான் பாடுவது வழக்கம். அவற்றையெல்லாம் பதிவுசெய்து எனக்குப் படியெடுத்துக் கொடுத்தார்கள் அன்பர்கள். அவற்றைத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். போன ஆண்டு பேசிய பேச்சை ஒலிப்பதிவு செய்து படியெடுத்துத் தந்தார்கள். அவற்றை வெளியிடும்பொழுது சுவாமிகளைப் பற்றிய வரலாறு சுருக்கமாக இருந்தால் நல்லது என எண்ணினேன். ஆகவே என்னுடைய மனத்திற்குத் தோன்றிய கோணல் முறையிலே ஒரு முகவுரையையும் சுவாமிகளின் வரலாற்றையும் எழுதி

னேன். அவற்றைப் பார்க்கிறவர்கள், அதன் கோணலைக் காணுவார்கள்.

ஆனால் கோணலிலேதானே அழகு இருக்கிறது? நேர் கோட்டில் அழகு இல்லை. வளைந்த கோட்டில்தான் சித்திரங்கள் அமைகின்றன. நேரான நடையில் அழகு இல்லை. கோணலான நடனத்திலேதான் அழகு இருக்கிறது. ஆகவே, நான் கோணலான ஒரு முகவுரையை எழுதியிருக்கிறேன். அந்தக் கோணலிலே மாணல் இருக்கிறதா என்பது படிக்கிறவர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம். ஒரு முன்னுரை, அதற்குப் பின்னாலே சென்ற ஆண்டு நான் நிகழ்த்திய சொற்பொழிவு, அதன் பின்னாலே அவ்வப்பொழுது நான் பாடிய பாடல்கள். எல்லாம் சேர்ந்து ஒரு புத்தகத்தை அவசரமாக நேற்றுச் சித்தம் பண்ணி இன்றைக்கு இங்கே கொண்டு வரும்படியாக அருள்பாலித்திருக்கிறார்கள், சுவாமிகள். அவர்களுடைய திருவடியிலே மலர் சாத்த அறியேன். அவர்களுடைய திருத்தோளிலே மாலை சாத்த அறியேன். அவர்களுடைய தலையிலே முண்டாசு கட்ட அறியேன். அவர்களுடைய இடையிலே ஆடை சாத்த அறியேன். ஆனாலும் நான் பாவாடை அணிந்திருக்கிறேன்; ஆனைகிய சுவாமிகளுக்குப் 'பாவாடை' அணிந்திருக்கிறேன்! பூமாலை போடாவிட்டாலும் பா மாலை போட்டிருக்கிறேன். இவைகளெல்லாம் அன்பர்களுக்கு உகப்பாக இருக்கும். என்னுடைய பாட்டினுடைய பலத்தினாலே அல்ல. இந்தப் பாட்டு யாரைச் சொல்கிறதோ அவர்களுடைய நினைவினாலே, படிக்கிறவர்கள் எல்லாம் இன்பம் எய்துவார்கள்.

ஊதுவத்தி கறுப்பாய் இருக்கிறது. ஆனால் அதைக் கொளுத்தும்பொழுது மணம் வீசுகிறது. கறுப்பாக இருக்கிறதே, இது எதற்காக என்று யாரும் வெறுப்

பதில்லை. அதுபோல அந்த ஊதுவத்தியினுடைய மணம் அவர்களது பெருமை. அதை வைத்திருக்கிற ஊது வத்தியாகிய கறுப்பன் நான். ஊதுவத்தி எரிந்து போகும், மணம் நிற்கும். ஆகவே படிக்கிற பக்தர்களுக்கு இந்தப் பாடல்களிலே உள்ள வடிவமோ சுவையோ மனத்தை மயக்காவிட்டாலும், இவற்றினூடே இருக்கும் பொருள், நம்முடைய சுவாமிகளுடைய புகழ், அவர்களுடைய உண்மை, உள்ளத்திலே பதிந்து விருப்பூட்டுவதற்குக் காரணமாகிக் கொஞ்சம் மதிப்பைப் பெறும் என்று நினைக்கிறேன். ஆண்டவனுடைய திருவருளினாலே, சுவாமிகளின் பேராசியினாலே, இந்தப் புத்தகத்தை இந்த அளவிலே வெளியிடுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்ததற்காக நான் பெருமிதம் அடைகிறேன். சுவாமிகளுடைய திருவடியை வந்தித்துச் சிந்திக்கிறேன்.

இந்தத் திருநாளில் பல பெருமக்கள் இங்கே வந்திருக்கிறார்கள். சுவாமிகளுடைய அருளாழியிலே துளைகின்றவர்கள் ஒருவர் இருவர் அல்லர். இது குட்டையா, குளமா, ஏரியா? இது கடல். கடலிலே துளையமாடுகிறவர்கள் எத்தனை பேர்! அந்த அந்த ஊரிலே துறைகள் ஏற்படுத்திக்கொண்டு அவர்கள் துளையமாடுகிறார்கள். இந்தத் துறை அருகருகிலேயா இருக்கிறது? விசாகப்பட்டினத்திலே கடற்கரை இருக்கிறது; கன்யாகுமரியிலும் இருக்கிறது. இரண்டும் ஒரே கடலின் கரையானாலும் நெடுந்தூரத்தில் உள்ளன; ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லை. ஆனால் கடற்கரை என்பதனால் தொடர்புடையது.

இந்தத் திருவண்ணாமலையில் ஓர் அறையிலே இது நடக்கிறது. இன்று சிவகாசியிலே அன்னதானம் விசேஷமாக நடக்கிறது என்று கேள்விப்பட்டேன். பஜனைகளெல்

லாம் நடக்கின்றன. இன்னும் எந்த எந்த இடங்களில் சுவாமிகளை வழிபட்டுப் பக்தர்கள் தம்முடைய அன்பைக் காட்டுகிறார்களோ, தெரியவில்லை. பெரிய கடற்கரையிலே உள்ள பல பல துறைகளில் மூழ்குபவரைப்போல இங்கே வந்திருக்கிற துரைகள் பலர் இருக்கிறார்கள். சுவாமிகளுடைய அருமையான அருள் உள்ளத்தை உணர்ந்து கொண்டவர்கள் அவர்கள். அவர்கள் எல்லாம் பேசினால் அது அவர்களுடைய அநுபவத்தைச் சொல்வதாயிருக்கும். உலகத்திலுள்ள தலைவர்களைப் பற்றிப் பேச வேண்டுமானால் செய்திகளையெல்லாம் சேகரிக்க வேண்டியிருக்கும். இங்குச் சுவாமிகளோடு பழகி, அவர்களுடைய திருக்கண் பார்வைக்கு இலக்காகி, அதனால் பெற்ற அநுபவங்களையெல்லாம் அவரவர்கள் தனித்தனியே சொன்னாலே அது பெரிய வாழ்க்கை வரலாறு ஆகிவிடும். ஒவ்வொருவர் சொல்வதையும் ஒரு புத்தகமாகவே கூட வெளியிடலாம். சில வெள்ளைக்காரர்கள் மேல் நாட்டிலே அப்படி எழுதியிருக்கிறார்கள். இந்த அநுபவத்தை உணர்ந்தவர்கள் உணர்ந்தவாறே சொல்ல முடியுமானால் அவைகளெல்லாம் சுவையுள்ள புத்தகங்களாக இருக்கும். எது உணர்ச்சி வசப்பட்டு வருகிறதோ, எது அநுபவத்திலிருந்து பிறக்கிறதோ, அதுதான் உண்மையாக இருக்கும். உண்மையே அழகு என்று ஆங்கிலத்திலே சொல்வார்கள். அது அழகாகவும் சுவையாகவும் இருக்கும். அப்படியுள்ள அநுபவங்களை இதோ நாம் கேட்கப் போகிறோம்.

எனக்குப் பின்னாலே பலர் பேசப் போகிறார்கள். நான் வெறும் வாசலைத் திறப்பவனாக இருக்கிறேன். அன்பர் சொன்னார், நான் திறந்து வைப்பேன் என்று. வாயில் காவலன் வேலையை நான் செய்கிறேன். வாசலைத் திறந்து வைக்கிறேன்.

எனக்குப் பின்னுல் வேதாந்த சித்தாந்த வல்லுநரும் மிகச் சிறந்த கல்வியாளரும் இப்பொழுது மாயோகியினுடைய பிரசாரகராக இருக்கின்றவருமாகிய நம்முடைய பெரிய அண்ணு தெ.பொ. மீனுட்சி சுந்தரம் அவர்கள் வந்திருக்கிருர்கள். இந்தச் சின்ன மலரை அவர்களுடைய கையினுலே வெளியிட்டு அருளுவார்கள். நான் மீனுட்சிசுந்தரம் என்னும் பெரியோருக்கு மனத்தில் மரியாதை வைக்கிறவன். என்னுடைய ஆசிரியருக்கும் ஆசிரியர் மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள். அவருடைய திருநாமத்தைத் தரித்த அவர்கள் என்னுடைய சிறிய நூலை வெளியிடுகிருர்கள் என்ருல் அது நல்ல பேறு என்று நான் நினைக்கிறேன். அவர்கள் இந்த நூலை வெளியிட்டுச் சில வார்த்தைகள் சொல்லும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன். தொடர்ந்து சில பெருமக்கள் பேசுவார்கள். இறைவனுடைய திருவருளினுலே, சுவாமிகளுடைய ஆசியினுலே, எல்லோருடைய உள்ளமும் நிறைவு பெறும்படியாகப் பிரார்த்திக்கிறேன்.

---

# சிற்றுரை - 2

ஓம். இங்கே அருள் உருவாய் எழுந்தருளியிருக்கும் சுவாமிகளுடைய திருப்பாத கமலங்களுக்கு என்னுடைய வணக்கத்தை முதலில் சமர்ப்பித்துக் கொள்கிறேன். தாய்மார்களுக்கும் அன்பர்களுக்கும் என்னுடைய வணக்கங்கள். இங்கே வந்து சில நேரம் நல்ல பொழுதாகப் போக்க வேண்டும் என்ற எண்ணத்தால் இதற்கு முன் சில பாடல்கள் பாடினேன். பாட்டு மாத்திரம் இருந்தால் போதுமா? உரையும் வேண்டுமென்று நினைத்தேன். இட்டிலியைக் கொடுத்தால் மேலே சட்டினியைப் போடுவது போலப் பாட்டுக்கப்புறம் இந்த உரையும் இருக்கலாமென்று நினைத்தேன்.

எதைப் பற்றிப் பேசுவது என்ற எண்ணம் எனக்குத் தோன்றுகிறது. எதைப் பற்றிப் பேசினால் பேச்சு இல்லாமல் போகுமோ அதைப் பற்றிப் பேசலாமென்று நினைக்கிறேன். முள்ளினால் முள்ளைப் போக்குவது போல, வைரத்தினால் வைரத்தை அறுப்பது போல, விஷத்தினால் விஷத்தை மாற்றுவது போல, பேச்சினால் பேச்சை மாற்றி விடலாமென்று பெரியவர்கள் சொல்லுவார்கள். 'பேச்சுக்கும் மௌனத்திற்கும் நேர் பகையாயிற்றே! எப்படிப் பேச்சினால் பேச்சை மாற்றலாம்?' என்ற சந்தேகம் வரும். ஒரு முள் காலில் தைத்தால் மற்றொரு முள்ளை எடுத்து மெள்ள மெள்ள அந்த முள்ளை எடுப்பது வழக்கம். நாம் பேசுகிற பேச்சில் மேலும் மேலும் ஆசையைப் பெருக்கி அவலத்தை உண்டாக்கி மனத்தில் சுழற்சி ஏற்படுத்துகின்றது ஒருவகை. அப்படியல்லாமல் மனத்துக்கு அமைதியைத் தந்து, மனத்திலுள்ள ஐயப்பாடு

களையெல்லாம் தெளிவித்து, மனம் அடங்கும் திறத்திலே அமைகின்ற பேச்சு ஒன்று.

ஓர் உதாரணம் சொல்லலாம். கட்டப்படாத பொல்லாத மாடு ஒன்று தன் கால் போன போக்கிலே போகும்பொழுது அதை யாரும் நிறுத்த முடியாது. யாராவது ஒரு கயிற்றில் முளை அடித்துக் கட்டினால் அந்தக் கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடிவிடும். அதனுடைய போக்கெல்லாம் தட்டுத் தடுமாறி ஒரு முறை இல்லாமல் இருக்கும். அதனுடைய நடையிலே பல பயிர்கள் அழியும். பல பேர் அஞ்சுவார்கள். ஆனால் அதே மாட்டைக் கொண்டு வந்து இருநூறு அடி நீளமுள்ள ஒரு கயிற்றில் கட்டி, அதனுடைய தலைப்பை ஒரு முளையிலே கட்டி விட்டால், அந்த மாட்டுக்குத் தன்னைக் கட்டிப் போட்டிருப்பது தெரியாது. நீளம் மிக அதிகமாக இருப்பதால் அது தெரியாது. வழக்கம் போல், அது திரியத் தொடங்கும். ஆனால் அப்படித் திரியும்பொழுது வட்டமாகத் திரியுமே ஒழியச் சிதறுண்ட நெறியில் செல்லாது. இருநூறு அடி நீளத்தில் சுற்றி வட்டமிடும். ஒரு சுற்றுச் சுற்றி வந்தால் ஓர் அங்குலம் கயிற்றில் குறையும். அப்படியே அது வேகமாகச் சுற்றச் சுற்றக் கயிற்றினுடைய நீளம் குறைந்து போகும். பிறகு மிகச் சமீபத்தில் வந்து முளை வேறு, கயிறு வேறு, மாடு வேறு என்றில்லாமல் அப்படியே நின்று விடும்.

அதுபோல, நாம் பேசுகிற பேச்சை அடக்காமல், இறைவன் என்ற முளையை வைத்து அவனோடு சம்பந்தப்பட்ட நீளமான பேச்சையே பேசிக் கொண்டிருந்தால், நாளடைவில் அது மிக மிகக் குறுகி, பிறகு பேச்சில்லாத நிலையை அடையலாம். முளையில்லாத மாடு

சுற்றுவது போல உள்ள பேச்சு, என்றைக்கும் அடங்காது. முளையடித்த கயிற்றிலே பிணைத்த மாடு முதலிலே சர்வ சுதந்தரத்தோடு போனாலும் அந்தப் போக்குக்கு ஓர் ஒழுங்கு இருப்பதுபோல, பக்தன் எப்படிப் பேசினாலும் இறைவனுடைய சம்பந்தமாகவே இருக்கும். அவன் பேசுகிற கதைகளெல்லாம் புராணமாக இருக்கும். அவன் பாடுகிற இசைகளெல்லாம் இறைவனுடைய புகழாக அமையும். அவன் உண்ணுகிற உணவெல்லாம் ஆண்டவனுடைய பிரசாதமாக இருக்கும். அவன் கேட்கின்ற பாட்டெல்லாம் ஆண்டவனுடைய சங்கீர்த்தனமாக இருக்கும். அவன் தொடுகின்ற பொருளெல்லாம் இறைவனுடைய பிரசாதமாக இருக்கும். அவன் பார்க்கின்ற அழகெல்லாம் இறைவனுடைய அழகாக இருக்கும். "கண்ணை மூடிக் கொள்; வாயை மூடிக்கொள்; காலாலே நடக்காதே; ஓரிடத்தில் இருந்து பிராணாயாமம் பண்ணு" என்று சொன்னால் அப்படிச் செய்வது மிகவும் கஷ்டம். அதற்குப் பதிலாக, "வாய் திறந்து நன்றாகப் பேசு; ஆனால் ஆண்டவன் கதையைப் பேசு. காதாரச் சங்கீதத்தைக் கேள்; ஆனால் இறைவன் புகழைக் கேள். வயிறு நிரம்பச் சாப்பிடு; ஆனால் சாதமாகச் சாப்பிடாமல் பிரசாதமாகச் சாப்பிடு. உடம்பு நிறையச் சந்தனத்தைப் பூசிக்கொள்; ஆனால் இறைவனுடைய அபிஷேகச் சந்தனத்தை பூசிக்கொள். தலை நிறைய மலரை வைத்துக் கொள்; ஆனால் இறைவனுக்கு அர்ச்சனை பண்ணி வைத்துக் கொள். நன்றாக நடமாடு, உலாத்து; இறைவனுடைய திருக்கோயிலைப் பிரதட்சிணம் பண்ணி உலாத்து" என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். நாம் நம்முடைய கருவிகளின் வசமாகிப் பலகாலும் திரியாமல், அவற்றை நம் வசப்படுத்தித் திரிய வேண்டும்.

வேகமாகப் போகிற குழந்தையைத் தடுக்க முடியாது. வேறு திசையைக் காட்டினால் ஓடும். கையிலே கத்தி வைத்திருக்கிற குழந்தையின் கையிலிருந்து அதைப் பிடுங்கினால் நம்முடைய கையும் காயமாகும்; அந்தக் குழந்தையினுடைய கையும் காயமாகும். அதற்குப் பதிலாக, ஒரு பொம்மையைக் கொடுத்தால் கத்தியைப் போட்டுவிட்டுப் பொம்மையைப் பிடித்துக் கொள்ளும். அதுபோல், உலகியல் பேச்சிலே ஈடுபட்டு உலகியல் பாட்டைக் கேட்கின்ற மனத்துக்கு இறைவனுடைய சம்பந்தமான பேச்சையும் பாட்டையும் கொடுத்தால், அந்தக் குழந்தை கத்தியை விட்டுவிட்டுப் பொம்மையை எடுத்துக் கொள்வது போல, இவற்றிலே ஈடுபடும். ஏனென்றால், பாட்டு நெஞ்சை உருக்குவது. பாட்டு எப்படி இருந்தாலும் கேட்கிற ஆசை உண்டாகும். இறைவனுடைய பாட்டாக இருப்பதனால், அந்த ஆசையானது நிறைவேறுவதோடு இறைவனுடைய புகழும் நெஞ்சில் பதியும். இதற்காகத்தான் இந்த நாட்டிலே கோயில் என்றும் குளம் என்றும் கடவுளுடைய விக்கிரகங்கள் என்றும் பூஜையென்றும் திருவிழாவென்றும் வைத்திருக்கிறார்கள். மனிதனுடைய வாழ்க்கையிலே கரசரணாதி அவயவங்களின் செயல்களும் அவனுடைய எண்ணங்களும் பேச்சும் இறைவனுடைய சம்பந்தமாக இருந்தால் மெல்ல மெல்ல அவை குறுகிப்போய்க் கடைசியில் மௌன நிலை வரும் என்பதற்காகத்தான் இதைச் சொல்லுகிறார்கள்.

இதையே சங்கராசாரியார் சொல்லுகிறார். சகுணப் பிரம்மத்தை உபாசனை பண்ணினால் நிர்க்குணப் பிரம்மத்தை அடையலாம் என்று சொல்கிறார். சாது சங்கத்தில் இருந்தால் சங்கமில்லாத நிலை வரும். 'ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்'. ஸத்ஸங்கமும் நிஸ்ஸங்கமும் நேர்விரோதமாகத் தோன்றும். பேச்சும்

மௌனமும் நேர் விரோதமாகத் தோன்றும். ஆனால் நிறைந்த பேச்சினாலே மௌனம் வந்து சித்திக்கும். எப்படி? மிகமிக அதிகமாக உழைத்தவன் உடம்பெல்லாம் வலியடைந்து எந்த உழைப்பும் செயலும் இல்லாமல் படுத்துறங்க முடிகிறதோ, அதுபோல, அதிகமாக இறைவனுடைய பேச்சைப் பேசுகிறவன் கடைசியிலே மௌன சாம்ராஜ்யத்திலே உலவுவான். அதனால்தான் இந்த நாட்டிலே சாது சங்கத்திலே சேர வேண்டும், ஆண்டவனுடைய புகழைப் பேச வேண்டும், ஆண்டவனுடைய கீர்த்தனத்தைக் கேட்க வேண்டும் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். தனியாகப் போய்ப் பிராணயாமம் பண்ணி யோகம் செய்வது என்பது எல்லோருக்கும் உரியதன்று. நம்முடைய கரசரணாதிகளை மடைமாற்றி இறைவனுடைய சம்பந்தமாக வைக்க வேண்டுமானால் அதற்குச் சாது சங்கம் முக்கியம்.

சாதுக்களோடு கூடும் பொழுது அவர்கள் போகின்ற நெறியே நமக்குப் பிரயோஜனமாக இருக்கும். ஆகையினால், விலங்கினங்களைப் போல் இந்த உலகத்தில் திரியாமல் அறிவுடைய மனிதனாக, சாது சங்கத்திலே சேர்ந்து, அவர்களுடைய பழக்க வழக்கங்களை மேற்கொண்டால் இந்த அவயவங்களெல்லாம் தீய நெறியிலே செல்லாமல் நல்ல நெறியிலே செல்லும்.

கொண்டி மாடானது ஒரு வட்டமான முறையிலே ஓடிப் பிறகு முளையோடு ஒன்றுபடுவது போல, நம்முடைய உள்ளமானது ஓர் ஒழுங்கு முறையிலே தியானம் செய்து, பிறகு நிச்சலனமான நிலையை அடையும். இதற்குக் குருநாதரும் சாது சங்கமும் வழி காட்டுவார்கள். (8-1-79)

# அன்பு மாலை

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

அகண்டசச்சி தானந்த நன்னெறியில் சேர
ஆர்வமுள்ளோர் இங்குவம்மின்; அருணைநகர் தன்னில்
திகந்தமுறு புகழ்வீசிச் சாந்தமுறு மேனித்
தேசுடைய ருய்நிற்கும் ராமசுரத் குமாரின்
சுகந்தருநற் காட்சியிலே இன்புறலாம்; பேசிச்
சொல்கின்ற வார்த்தையிலே சாந்தத்தைப் பெறலாம்;
மகந்தருநற் பயனெல்லாம் ஒருங்கேவந் தெய்தும்;
மனம்இதற்குச் சாட்சியென்றே மதித்திடலாம் கண்டீர். 1

வம்மின் - வாருங்கள். திகந்தம் உறு - திசைகளின் முடிவை எட்டும். மகம் - வேள்வி.

கண்டபொருள் யாவையுமே உண்மையெனக் கொள்வீர்
காதினுல் கேட்டவெலாம் மெய்யென்றே சொல்வீர்,
விண்டஉரை அத்தனையும் பொருள்உண்டென் றுரைப்பீர்,
வீணுக வாழ்நாளைப் போக்கிநலம் அறியீர்,
கண்டனைய மொழிபேசும் பெருஞானி, அருணைக்
கண்திகழும் ராமசுரத் குமாரென்னும் யோகி,
பண்தருநற் காட்சியினைப் பெற்றிட்டால் அங்கே
பயன்பெறலாம்; நயன்பெறலாம்; சாந்தியங்கே உண்டே. 2

விண்ட - பேசிய. கண்டு அனைய - கற்கண்டைப் போன்ற. பண் - சிறப்பு.

உண்டவெலாம் மலமாகும்; பூசியவை அழுக்காம்;
உலகத்தில் காலமெலாம் வீணுகிப் போகும்;
கண்டவெலாம் மெய்யாகச் சொல்லுதற்கும் உண்டோ?
காதில்விழும் சேதியெல்லாம் மெய்யென்றே சொலவோ?

கொண்டபொருள் அத்தனையும் கைவிட்டே ஓடும்,
கூடுகின்ற மூச்சடங்கும் காலத்தில் இவைதாம்
அண்டுகின்ற துணையாமோ? ஆகாவாம் கண்டீர்;
அருள்ராம சுரத்குமார் பாலேநீர் வம்மின். 3

வம்மினென்றே உலகத்தார் தமைக்கூவி அழைப்பேன்;
வருவிருந்து காத்திருக்கப் பசித்திருக்க லாமோ?
செம்மையுறு பொருளிதுவென் றேசொல்லி என்றும்
சிதையாத மாவின்பம் பெறுதற்காம் நெறியை
அம்மஇவன் பாற்சென்றே அடைதற்கும் ஆகும்;
அருணையினில் ராமசுரத் குமாராகும் யோகி,
செம்மலிவன் திருப்பாதம் அடைமின்கள்; அங்கே
சீர்பெறலாம், ஏர்பெறலாம், சாந்தியினைப் பெறலாம். 4

செம்மல் - தலைவன். ஏர் - அழகு.

பெறலரிய பேறெதுவென் றுராய்ந்து நாளும்
பித்தரைப்போல் திரிந்தோங்கிப் பொருளினையே [ஈட்டி
உறவினர்கள் சுற்றத்தார் நண்பரென ஏங்கி
ஊர்ஊர்கள் தோறும்உழன் றுளச்சாந்தி இன்றிக்
கறவைமல டானதுபோல் வாழ்நாள்கள் வீணே
கழித்தொழித்து நில்லாமல் பெறும்பேறு சொல்வேன்;
திறமதுசார் அருணையினில் ராமசுரத் குமாரைச்
சேர்மின்கள்; அவன்காட்சி தனில்இன்பம் காண்பீர். 5

கறவை - கறக்க வேண்டிய பசு.

காண்பரிய காட்சியெல்லாம் காட்டுகின்றேன் என்பார்;
கனமுடைய பொருளைநான் வருவிப்பேன் என்பார்;
பூண்பெரிய எல்லாமும் மறைதற்கோர் நெறியைப்
பூட்டுவிப்பேன் என்பார்கள்; சித்துவிளை யாட்டாய்

ஏண்பெறவே காட்டுவார்; யாவையுமே பொய்யாம்;
இவைதம்மில் உண்மையில்லை; நம்பிக்கை வேண்டாம்;
சாண்பெரிய கும்பிக்கே உழல்கின்ற மாந்தர்
தமைக்கண்டார் என்கிடைக்கும் பயன்ஏதும் உண்டோ?

ஏண் - பெருமை. சாண் பெரிய கும்பிக்கே - சாணளவுள்ள வயிற்றுக்கே.

உண்டுண்டு நாள்நாளும் கும்பிக்கே வாழ்வை
உறக்கழித்து விளையாடி மிகப்பேசித் திரிந்து
கொண்டஇந்தப் பிறவியிலே பெரும்பேற்றைக் காணுக்
குறையுடைய மாந்தர்தாம் என்செய்வார்? நாளை
விண்டுடையக் காலன்வரின் நடுநடுங்கிச் சோர்வார்;
வேதமறிந் தார்க்குமப்போ துய்திபெறல் உண்டோ?
திண்டிறலார் அருணையினில் ராமசுரத் குமாரின்
திருவடியைச் சேர்மின்கள்; பரிகாரம் உண்டே. 7

உறக்கழித்து - மிகுதியாக வீணாக்கி. விண்டு உடைய - நம் உயிர் உடம்பினின்றும் பிரிய.

பரிகாரம் பலநோய்க்குச் சொல்வார்கள்; தம்பால்
படைக்கின்ற நோய்க்குரிய மருத்துவத்தைக் காணார்;
அரிதாரம் பூசுகின்ற நடிகர்போல் பிறர்க்கே
அருநெறியைக் காட்டுவார்; அவர்சிறிதும் உய்யார்;
பெரிதான வழிசொல்வார் போலஅமர்ந் திருப்பார்;
பேதையர்கள் தம்மையே மாற்றியே பறிப்பார்;
உரிதான பொருள்இதுவென் றெண்ணமல் அருணை
உறும்ராம சுரத்குமார் தம்பாலே சேர்மின். 8

சேர்க்கின்ற பொருள்எல்லாம் நித்தியமாய் இருக்கும்,
சிறப்புடைய கல்வியெல்லாம் பெரும்புகழைத்தருமால்,
ஈர்க்கின்ற உடலழகை எந்நாளும் பெறுவோம்,
என்கின்ற மயக்கமெலாம் விட்டுவிடு வீரே;

பார்க்கின்ற பொருளெல்லாம் கண்முன்னே சாகப்
பாரினிலே நித்தியமாம் பொருள்ஒன்றும் உண்டோ?
சீர்க்குன்றாக் குணமுடையான், ராமசுரத் குமார்பால்
சென்றிடுவீர்; நித்தியமாம் வாழ்வினையே காண்பீர். 9

ஈர்க்கின்ற - மனத்தைக் கவர்கின்ற.

பாம்புசிறி தானாலும் பெரியகம்பு கொண்டே
பதைபதைத்தே அடிப்பதற்கோர் வழிதெரியவேண்டும்.
நாம்பெரியம் என்றிறுமாந் துலகினிலே திரிந்து
நாளையமன் வருங்கால்மிக் கச்சமுற நிற்பீர்,
தூம்புடைய கழைமுரலும் கண்ணனென நின்று
துரியநிலை காண்கின்ற சிவமெனவே ஓங்கும்
ஏம்பலுறு ராமசுரத் குமார்தன்பால் வருவீர்;
இன்பநெறி இதுவென்றே கண்டிடற்கும் ஆமே. 10

தூம்பு - துளை. கழை - புல்லாங்குழல். ஏம்பல் - இன்பம்.

ஆமென்பார் சிலகாலை; அன்றென்பார் சிலகால்;
அறிவென்பார் சிலகாலை; அன்பென்பார் சிலகால்;
ஓமென்பார்; அதற்குள்ளே உறும்பொருளாம் என்பார்;
ஒருசொல்லும் இல்லாத மோனநிலை என்பார்;
தாமென்பார்; தம்மின்றிப் பிறிதென்றே சொல்வார்;
தயையுடனே ஒன்றென்றே சொல்லுதற்கோர் ஞானி
ஏமம்சார் ராமசுரத் குமாராகி நின்றான்;
இவன்பாலே அருளணையினில் வந்தடைந்தால் உய்வாம். 11

ஏமம் - பாதுகாப்பு.

உய்யுநெறி காட்டுதற்கே நான்மறைகள் உண்டாம்;
உலகினிலே பலபெரியோர் அவதரித்தே வந்தார்;
பெய்யுமழை போலஅவர் உபதேசம் சொன்னார்;
பிறங்குமவை மலைபோலக் குவிந்திருக்கு மாலோ;

ஐயமின்றித் தெளிவதற்கே அவையிருந்தா லுந்தான்
அறிவதனை அறிவார்கள் மிகஅரியர் அன்றோ?
நெய்யிலுறு சுவைஉண்டால் தான்தெரியும்; அதுபோல்
நீர்நேரே ராமசுரத் குமார்தன்னை அடைமின். 12

பிறங்கும் - விளங்கும்.

அடைகின்ற பொருட்கெல்லாம் குற்றங்கள் உண்டாம்;
அடையாமல் எந்நாளும் நம்பாலே இருந்து
மிடைகின்ற பொருளாகும் பரப்பிரமம் தனக்கு
வேதனையொன் றில்லை,ஒரு குறையுமில்லை என்பார்;
சடைநின்ற பெருமானும் திருமாலும் தானாய்த்
தாங்குமருள் வடிவெடுத்து ராமசுரத் குமாராய்த்
தடையில்பெருந் தயையுடனே நிற்கின்ற சாமி
தாளடைந்தார் ஐயமெல்லாம் போக்கிடுவார் கண்டீர். 13

மிடைகின்ற - நெருங்கியுள்ள.

போக்கில்லான் வரவில்லான் புணர்ப்பொன்றும் இல்லான்
புதுமையிலான் பழமையிலான் காலமெலாம் இல்லான்
தாக்கில்லான், தனியில்லான், நிற்பதுவும் இல்லான்;
சார்கின்ற பொருட்கெல்லாம் சார்வாகி நிற்பான்;
நோக்கெல்லாம் தயையாக நுனிக்கின்ற பார்வை
நுட்பத்தில் கண்டிடலாம் அவனுடைய சீர்த்தி;
தேக்குமருள் வடிவமதாம் ராமசுரத் குமார்தன்
திருவடியே சரணமென்றார் சாந்திநிலை அடைவார். 14

புணர்ப்பு - சேர்தல். தாக்கு - மோதுதல். நுனிக்கின்ற - கூர்ந்து நோக்குகின்ற.

வாரமையும் பெருந்தனத்து மங்கையர்கள் பாலே
மயலாகித் துயருழந்து வாழ்நாளை வீணே
சோர்வுபெற வேஇழந்து துக்கிக்கும் மாந்தர்
சுகக்கடலை அடையாமல் நிற்கின்றார் என்றால்

ஏர்பரவும் அருளுடைய அவர்க்குநெறி உண்டோ?
இன்னலெலாம் போக்கியுறு ஞானமெய்த வேண்டின்
ஆர்பெரியர் என்றாராய்ந்தே அதற்காக ஏங்கி
அலையாமல் ராமசுரத் குமார் தன்னை அடைமின். 15

வார் - கச்சு. துயர் உழந்து - துயரத்தால் வருந்தி. இன்னல் - துன்பம்.

மின்னலெனும் வாழ்வினையே மெய்யென்று நம்பி
விளங்கிழையார் மயலொன்றே பெருஞ்சுகமாய் எண்ணிக்
கன்னலுறு வில்லெடுத்த மதனுடைய போரில்
கருத்தழிந்து காமமெனும் சுறவின்வாய்ப் பட்டே,
இன்னல்மிக அடைவதனால் உலகத்தில் என்றும்
இடையூறும்; ஆதலினால் ஒன்றுசொல்வேன் கேண்மின்:
பன்னுமுறை தனில்தாய்போல் அன்புநிறைந் திருக்கும்,
பகவந்தன், ராமசுரத் குமார்பாலே அடைமின். 16

விளங்கு இழையார் - பிரகாசிக்கின்ற நகைகளை அணிந்த பெண்கள். கன்னல் - கரும்பு, மதன் - காமன்.

பாலென்றும் தேனென்றும் பழமென்றும் பேசிப்
பரிவுடைய மாதர்தம் மயலினிலே உழன்று
சீலமெலாம் அறப்போக்கி அமைதியினை இழந்து
திரிகின்ற மாந்தர்காள், சாந்தமுற வழிதான்
கோலுகின்ற அருணையினில் தயையாரும் குன்றாய்க்
குருவாகி உருவாகி ராமசுரத்கு மாராம்
சாலஉறு தனிப்பேரைப் படைத்துநிற் கின்ற
சாமிஅருள் அடைவீரேல் துக்கமெலாம் போகும். 17

கும்மிருட்டுத் தனில்ஒளிபோல் கோற்கணையின் முன்னே
குறுகுகின்ற மெத்தைபோல் பனிப்படைக்கு முன்னே
பம்மிவரு கதிரோன்போல் மாயையெனும் இருட்டைப்
பறிஞானம் போல்எமக்குப் பிறவியினைப் போக்கிச்

செம்மையுறு வாழ்வளிக்க நிற்கின்ற செம்மல்
திருவண்ணு மலைதன்னில் ராமசுரத்கு மார்தான்
அம்மையென அப்பனென அருள்செய்தே நிற்பான்;
அவனருளைப் பெற்ருர்கள் பெருஞ்செல்வர்அன்ருே? 18

கோல் கணை - நீண்ட அம்பு. பம்மி - பம்பி; பரந்து.

செல்வமெனக் கைப்பொருளை நம்பியே மாந்து
திருடர்க்குப் பறிகொடுத்து மனம்மிகவும் சாம்பிப்
பல்விதமாம் முயற்சிகளில் சென்றுதடு மாறிப்
பாரில்நின்ற வாழ்வெல்லாம் வீணுக்ப் போக்கி
அல்லலுற வேண்டாம்; மெய்ஞ் ஞானத்தை அடைய
ஆரருளை மிகஅடைய வழிசொல்வேன் கேட்பீர்;
மல்லலுறும் அருணைநகர் ராமசுரத்கு மார்தான்
மயக்கமெலாம் தீர்க்கின்ருன்; சென்றடைமின் சரணே!

சாம்பி - வாடி. மல்லல் - வளம்.

சரணமென வந்தவர்கள் தமக்கெல்லாம் அருளைச்
சார்த்துகின்ற யோகிஇவன் திருவருளும் வாழி!
அரணமென விஞ்ஞானப் பகைபாற்றத் தயையை
அருள்கின்ற பெருஞ்சித்தன் இவனருள்தான் வாழி!
கரணமெல்லாம் தவிர்கின்ற மெய்ஞ்ஞான போதக்
காட்சிதரும் ராமசுரத் குமார்நாமம் வாழி!
அருணைநகர் மிக்வாழி! அதிற்சுடரும் தெய்வ
அருள்வாழி! உலகமெலாம் வாழிமிக வாழி! 20

அரணம் - பாதுகாப்பு. பாற்ற - அழிக்க.

(8—1—79)

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

பங்கமார் மாயை தன்னில்
பட்டுழல் மாந்தர்க் கெல்லாம்
சங்கடம் தீர்க்கும் செய்தி
சாற்றுவான், அருணை தன்னில்

பொங்கிய ஆர்வத் தன்பர்
புரிவுடன் வணங்கிப் போற்றும்
துங்கனாய் நிற்கும் ராம
சுரத்குமார் தாள்கள் போற்றி! 21

பங்கம் - குற்றம். புரிவு - விருப்பம். துங்கன் - பரிசுத்தன்.

விலையிலா மாணிக் கம்போல்
விளங்கிய சுத்த ஆன்மா
மலைவற நின்று முத்தி
மாண்புறக் காண வேண்டும்;
அலைவுறல் நீக்கல் வேண்டும்,
அறிவினை ஆக்கல் வேண்டும்;
தொலைவறச் சொல்லும் ராம
சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 22

தொலைவு அற - அழிவு நீங்க.

வேயுறு தோளி பங்கன்
விடமுண்ட கண்டன் எங்கள்
நாயகன், ராமன், கண்ணன்,
நாதராம் யாவர் தாமும்
மேயஇங் கிவனாய் வந்தார்;
விளங்கிய அருளை தன்னில்
தூயனாய் நிற்கும் ராம
சுரத்குமார் பதங்கள் போற்றி! 23

வேய் உறு தோளி பங்கன் - மூங்கிலைப்போன்ற தோளையுடைய உமாதேவியாரைத் தன் பாகத்திலே கொண்ட சிவபெருமான்.

வரிசையாய்ச் செல்வம் பெற்றார்,
மங்கையர் சுகத்தை உற்றார்,
தரிசெலாம் நிலமாய் ஆக்கித்
தாழ்வரும் பயிர்கள் செய்தார்,

கிரிசையில் காலன் வந்தால்
கிட்டுறு தமைப்பர் கொல்லோ?
துரிசறும் நல்லோன் ராம
சுரத்குமார் பாதம் தாழ்மின். 24

கிரிசையில் - வேலை செய்து கொண்டிருக்கையில். துரிசு - குற்றம்.

எங்கணும் நிறைந்து நிற்பான்;
யாவுமாம் உருவைக் கொள்வான்;
தங்கமாய் வெள்ளி யாகிச்
சாற்றுறும் இரும்பு மாகிப்
பொங்கிய இறைவன் தன்னைப்
புந்தியில் காணு மாறு
துங்கனைச் சொல்லும் ராம
சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 25

பகலெலாம் வேலை செய்து
பாடுபட் டிரவில் இன்பம்
தகஉறும் மாந்தர் தாமும்
தம்முடை ஆன்மச் செல்வம்
மிகுதற்கா ஆற்றும் செய்கை
வேறுண்டோ? வம்மின் இங்கே?
துகளறும் தூயோன் ராம
சுரத்குமார் பாதம் தாழ்மின். 26

துகள் - குற்றம்.

சொல்லுதற் கில்லை யென்றே
சும்மாநிற் கின்ற மோன
நல்லவர் போற்றும் நாதன்,
ஞானியுள் ஞானி, எல்லாம்

வல்லவர் தாமும் வந்து
வணங்கிடும் செய்ய பாதன்,
தொல்லைகள் தீர்க்கும் ராம
சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 27

வல்லவர்க் கெல்லாம் வல்லன்
மாண்புறும் ஞானி யாகித்
அல்லல்கள் தீர்க்கும் தன்னை
அன்பர்என் றடைவார் பல்லோர்க்
கொல்லையில் லாத இன்பம்
இதுவெனக் காட்டும் நல்லோன்,
தொல்லைகள் தீர்க்கும் ராம
சுரத்குமார் பாதம் போற்றி! 28

மருளற்று வாழ்வோர்க் கெல்லாம்
மாண்புறும் தலைவ னாகி
இருளற்ற ஞானச் செம்மல்,
எங்கணும் நிற்கும் ஐயன்,
தெருளுற்றுப் போற்று கின்ற
செல்வனாய் அருணை தன்னில்
சுருளற்று நிற்கும் ராம
சுரத்குமார் திருத்தாள் போற்றி! 29

மருள் - மயக்கம். தெருள் - தெளிவு. சுருளற்று - சுழலுதல் இல்லாமல்.

வெல்லுதற் கரிய ஐந்து
பொறியெலாம் வென்ற வீரன்,
மல்லலுற் றுளமெய்ஞ் ஞான
மலையெனப் பெரியோர் சொல்வர்;

கல்லலுற் றிடும்நெஞ் சத்துக்
  கசடெலாம் போக்கும் வீரன்;
தொல்லையை நீக்கும் ராம
  சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 30

கல்லல் - உள்ளே தோண்டுவதேபோலத் துன்பத்தால் குமுறுதல். கசடு - குற்றம்.

மகந்தரும் பயன்க ளெல்லாம்
  வந்திடல் போல, ஞான
முகந்தரும் கருணை தன்னால்
  மூண்டிடும் நலங்கள் தந்தே
அகந்தரும் அன்பு காட்டி
  அருள்மழை பொழியும் ஐயன்,
சுகந்தரும் ஞானி ராம
  சுரத்குமார் பாதம் போற்றி! 31

மகம் - வேள்வி.

அரியவாம் என்று சொல்லி
  அடர்சித்துப் பலவும் காட்டிப்
பெரியவர் என்று ஞாலம்
  பேசிட வைப்பார் பல்லோர்;
மரிவுறு காலை அன்னோர்
  மறலிபால் அஞ்சி நிற்பார்;
துரிசறு சீலன் ராம
  சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 32

சித்து - சித்தி. மரிவுறு காலை - இறக்கும்போது. மறலி - யமன். துரிசு - குற்றம்.

வஞ்சக நெஞ்சர் காணா
  மாண்பினன்; நகையே என்றும்
கொஞ்சிடும் முகத்தான்; யார்க்கும்
  குழந்தையைப் போலே நிற்பான்;

தஞ்சமென் றடைவார் பாலே
சார்ந்திடு துயரைப் போக்கித்
துஞ்சுதல் இல்லா ராம
சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 33

துஞ்சுதல் - இறத்தல்.

வீடுற வேண்டு வார்கள்
மெய்ம்மையாம் நெறியைக் கண்டு
காடுறல் போக்கி நெஞ்சக்
கருத்தொன்றி நிற்றல் வேண்டும்;
மாடுறு செல்வந் தன்னை
மதிக்கின்றீர் இங்கே வம்மின்;
சூடுகள் போக்கும் ராம
சுரத்குமார் அடியைத் தாழ்மின். 34

வீடு - முத்தி. மாடுறு செல்வம் - தம் பக்கத்தில் உள்ள செல்வம். சூடுகள் - தாபத் திரயங்கள்.

பல்லெலாம் தெரியக் காட்டிப்
பரிந்திரு கைகள் நீட்டி
மல்லலார் செல்வர் பாலே
வருந்தியே இரத்தல் வேண்டாம்;
கல்லெலாம் நெகிழச் செய்யும்
கருணையன் பாலே வம்மின்;
தொல்லைதீர்க் கின்ற ராம
சுரத்குமார் பாதம் தாழ்மின். 35

மல்லல் - செல்வவளம்.

கண்ணென நிற்பான்; கண்ணில்
கருவிழி யாகி நிற்பான்;
எண்ணென நிற்பான்; எண்மேல்
எழுத்ததைச் சொல்வான்; என்றும்

திண்ணெனும் நெஞ்ச மாயைத்
திரையெலாம் போக்கும் ஐயன்;
துண்ணென அஞ்சான்; ராம
சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 36

இனிமையுற் றார்கள் எல்லாம்
இவன்பக்கல் வந்தே நிற்பார்;
கனிவுறு நெஞ்சர் இங்கே
காண்பதே இன்பம்; என்றும்
தனிமையும் கூட்டந் தானும்
சமமென நிற்கும் ஐயன்;
துனிதவிர்க் கின்ற ராம
சுரத்குமார் இணைத்தாள் போற்றி! 37

துனி - வெறுப்பு.

வாயினால் பேசும் சொற்கள்,
மனத்தினால் எண்ணும் எண்ணம்,
தோய்வுறு தேகத் தாலே
சுலவிய செய்கை யெல்லாம்
நாயகன் தன்பால் வைக்கும்
நன்னெறி காட்டும் ஆசான்,
தூயவ னாகும் ராம
சுரத்குமார் துணைத்தாள் போற்றி! 38

சுலவிய - செய்த.

கலைகளின் பொருளாய் நிற்கும்
கருத்தெது? பிரமந் தன்னை
அலைவிலா நெஞ்சத் துள்ளே
அனுதினம் அமைத்துப் போற்றி

மலைவுறல் நீக்கல் வேண்டின்
மாண்புறும் அருளை தன்னில்
துலைதவிர் கின்ற ராம
சுரத்குமார் பாதம் தாழ்மின். 39

மலைவுறல் - மயங்குதல். துலை தவிர்நின்ற - ஒப்பில்லாத.

பண்ணுறு பாடல் கேட்டுப்
பலகாலும் சிரிப்பான்; தன்னை
அண்ணிய அன்பர்க் கெல்லாம்
அடைகின்ற கவலை தீர்ப்பான்;
மண்ணுறும் ஞானி யர்க்குள்
மாதவ ஞானி யாவான்;
துண்ணென உவக்கும் ராம
சுரத்குமார் திருத்தாள் போற்றி! 40

அண்ணிய - அடைந்த. மண் உறும் - உலகிலுள்ள. துண்ணென-விரைவில்.

இட்டமாய் நின்ற தெய்வம்
இவனெனப் பல்லோர் வந்தார்;
மட்டறு மகிழ்ச்சி கொள்ள
மாநெறி தன்னைக் காட்டி
நட்டமே தும்சா ராத
நன்னயம் காட்டு கின்றான்,
துட்டரைச் சீறும் ராம
சுரத்குமார் திருத்தாள் போற்றி! 41

மட்டு - அளவு.

மயர்வுறும் மகித லத்தில்
மாயையின் ஆடற் குள்ளே
பயில்வுறும் மாந்தர் எல்லாம்
அஞ்ஞானச் சிறையிற் பட்டே

அயர்வுறு கின்ற காலை
அருங்குரு வாகி நிற்பான்,
துயர்தவிர்க் கின்ற ராம
சுரத்குமார் அடியைச் சார்மின். 42

மயர்வு - மயக்கம். மகிதலத்தில் - பூமியில்.

கணையெனும் பூக்கள் ஐந்தால்
காமன்செய் போரில் வெற்றி
அணைவுறல் வேண்டும் என்னின்
அவன்பதம் அடைவீர்; என்றும்
பிணைதவிர் கின்ற சீர்கொள்
பெரியவன், ஞான யோகி
துணைதவிர் கின்ற ராம
சுரத்குமார் அடியைச் சார்மின். 43

கணை - அம்பு. பிணை - கட்டு; பாசம். துணை - ஒப்பு.

எக்கணும் நிறைந்தே ஈசன்
இருக்கின்றான் என்பார் பல்லோர்;
மிக்கபேர் சொலினும் அன்னோன்
விளக்கமாய்த் தெரிவான் அல்லன்;
தொக்கது பொய்யே என்பார்;
தூயஅன் னோன லைக்கண்
துக்கம்தீர்க் கின்ற ராம
சுரத்குமார் தம்பால் வம்மின். 44

எக்கணும் - எவ்விடத்தும்.

மாசுறு வாழ்க்கை யெல்லாம்
மன்னிய நிலைய தென்றே
பேசுவீர், செயல்கள் செய்வீர்,
பின்னமாம் புகழைச் சேர்ப்பீர்;

தாசராய் வந்தார் தங்கள்
தாளினைப் பணியும் செம்மல்
தூசகல் கின்ற ராம
சுரத்குமார் தாளைச் சேர்மின். 45

பின்னம் ஆம் - குறைந்து போகும். தூசு - குற்றம்.

கற்சிலை யாகி நிற்கும்
கடவுளை ஏத்திப் போற்றிப்
பற்பலர் ஏமாற் றத்தைப்
பகிர்கின்றார் எனினும் இங்கே
சற்சனர் போற்றுகின்ற
சாமியைக் கண்டால் இன்பாம்;
துற்சனர் சாரா ராம
சுரத்குமார் தம்பால் வம்மின். 46

சாரமே இல்லாப் பூமி
தனில்வாழ்வை மெய்யென் றெண்ணிக்
காரமார் கோபம் கொண்டு
கருணையே சிறிதில் லாமல்
வீரமே பேசி நிற்பீர்,
விழலுக்கே இறைப்பீர் நீரை,
தூரமில் பெரியோன் ராம
சுரத்குமார் தன்னைச் சார்மின். 47

தூரம் இல் - சமீபத்தில் இருக்கும்.

இன்பமும் துன்பந் தானும்
இயற்கையென் றெண்ணி என்றும்
தன்பதம் இறவா மோனத்
தனிநிலை இருக்கின் றார்கள்

என்பெரும் தெய்வ மென்றே
  இறைஞ்சிய பெரிய நாதன்
துன்பமில் லாத ராம
  சுரத்குமார் திருத்தாள் போற்றி! 48

இறைஞ்சிய - வணங்கிய.

அடர்கின்ற பாவ மெல்லாம்
  அருங்கதிர் முன்ப னிப்போல்
இடருற்றுப் போகும் அன்னோன்
  இருவிழி தன்முன் னாலே;
திடர்பட்ட அஞ்ஞா னத்தைச்
  சீர்பெறும் ஞானத் தாலே
தொடர்வுறு மற்செய் ராம
  சுரத்குமார் பாதம் தாழ்மின். 49

அடர்கின்ற - சேர்கின்ற. திடர்பட்ட - குவிந்து நின்ற.

இல்லையென் பார்கள் சில்லோர்;
  இருப்பதென் பார்கள் பல்லோர்;
மல்லுறும் மாயை தன்னில்
  மயங்கியே நிற்பார் பல்லோர்;
சொல்லிலே அடங்கா ஒன்றைத்
  துய்ப்பதே வழியென் கின்றான்,
தொல்லைகள் தீர்க்கும் ராம
  சுரத்குமார் திருத்தாள் சேர்மின். 50

மல் உறும் - மோதுதல் செய்யும். துய்ப்பது - அநுபவிப்பது.

காலத்தால் இடத்தால் எல்லை
  காணொணாப் பிரமந் தன்னைச்
சீலத்தால் ஞானத் தாலே
  தெளிவுறக் காண்மின் என்பான்;

ஆலத்தால் அமுதை யாக்கும்
அரனென வந்து நிற்பான்;
தூலத்தால் காணும் ராம
சுரத்குமார் திருத்தாள் போற்றி! 51

தூலத்தால் - இந்தச் சரீரத்தினுல்.

மாய்வுற்ற பின்னர் வந்து
வாய்க்குமோர் வாழ்வு தன்னை
ஓய்வுற்ற காலை யேனும்
உணர்வுற நிற்பீர் கொல்லோ?
தேய்வுற்ற பிறவி தன்னைச்
சிறப்புறச் செய்ய லாமேல்
தோய்சுகம் காண்பீர்; ராம
சுரத்குமார் தன்பால் வம்மின். 52

அலைவுற்று நெஞ்சம் மாழாந்
தனுதினம் பலஎண் ணத்தில்
கலவுற்றுத் துன்பம் கண்டு
காமத்தில் வாய்ப்பச் சிக்கிப்
பலவுற்ற இடர்கள் பெற்றுப்
பாழ்போகா வண்ணம் எண்ணின்
சுலவுற்று வந்து ராம
சுரத்குமார் பாதம் சேர்மின். 53

மாழாந்து - மயங்கி. கலவுற்று - இணைந்து. சுலவுற்று - கலந்து உற்று.

மன்னரும் புலவர் தாமும்
வந்திங்கு வணங்கு வார்கள்;
சொன்னசொல் கேட்டே இன்பம்
துய்க்கின்றார் இவன்தன் மாட்டே;

வன்னமார் பாகை கொள்வான்;
மலிதரச் சிரிப்பான் என்றும்;
துன்னிடும் ஞானி ராம
சுரத்குமார் பாதம் போற்றி! 54

பாகை - தலைப்பாகை. மலிதர - மிகுதியாக.

நெடிதுற நினைந்து ஞான
நிலையினை அடைந்து சாந்தக்
கடிநகர் அதனிற் சென்று
காப்புறும் இன்பம் கொள்வார்
அடிதனைப் பணிய நின்றான்;
அருள்மிகும் அருணை தன்னில்
துடியிலா நெஞ்சன் ராம
சுரத்குமார் அடிகள் போற்றி! 55

கடிநகர் - காவலையுடைய நகரம். துடிஇலா - துடித்தல் இல்லாத.

போற்றிய தெய்வ மெல்லாம்
பொலிகின்ற உருவன், என்றும்
சோற்றுக்கே கவலை கொள்ளும்
துன்பினைப் போக்கும் சீலன்,
ஆற்றுறும் அன்பர் தங்கட்
கருள்கின்ற பெரிய நேயன்,
தோற்றிடும் ஞானி, ராம
சுரத்குமார் மலர்த்தாள் போற்றி! 56

ஆற்றுறும் - தன் வழியில் வந்து நிற்கும்.

வைவினைப் புகழாக் கொள்வான்;
வாழ்வினை மாயம் என்பான்;
செய்வினை செப்ப மாகச்
சிந்திப்பார் தமக்கு நேயன்;

நைவுறும் நெஞ்சத் தார்கள்
நாயகன்; அருணை மேவும்
தூய்யவன் ஆகும் ராம
சுரத்குமார் பாதம் போற்றி. 57

செப்பம்-செம்மை, நிறைவு, குற்றம் இன்மை. தூய்யவன்-சுத்தன்.

மதிநலம் பெற்றோர் எல்லாம்
வாழ்வினில் புகழைப் பெற்றார்;
நிதிநலம் பெற்றோர் எல்லாம்
நீள்சுகம் பெற்றா ரேனும்
கதியுறு காலன் வந்தால்
காப்பதற் காறும் உண்டோ?
துதிபெறும் ஞானி ராம
சுரத்குமார் தன்னைச் சேர்மின். 58

மதி - புத்தி. கதி - வேகம்.

கடல்எனும் பிறவி தன்னைக்
கடப்பதற் காறு காணார்,
மிடல்பெரி தடைந்தோம் என்பார்;
வேதாந்தம் படித்தோம் என்பார்;
அடல்மிக உடையோம் என்பார்;
அறிஞர்யாம் என்பார்; என்னாம்?
சுடர்வுறு கின்ற ராம
சுரத்குமார் தன்னைச் சார்மின். 59

மிடல் - வலிமை.

ஏலாத செய்கை யெல்லாம்
எண்ணியே செய்வார் பல்லோர்;
மாலாகி நெஞ்சம் மாழ்கி
மதியினை இழந்து நிற்பார்;

நூலாய்வார், தம்மை ஓரார்;
நுவல்கடற் பிறவி சார்வார்;
தோலாத நாவான் ராம
சுரத்குமார் தன்னை அண்மின். 60

மாலாகி - மயங்கி. மாழ்கி - வருந்தி. தோலாத நாவான் - சொன்ன சொல்லில் சோர்வு இல்லாத நாவையுடையான்.

யார்வந்தார், யார்போனார்கள்
என்றுநாம் கணக்குப் பார்க்கின்
நேர்வந்தார் யார்இருந்தார்?
நிலையில்லா தெல்லாம் போனார்;
கார்வந்து மலியும் சோலை
அருணையில் கதித்த செல்வன்,
சோர்வொன்றில் லாத ராம
சுரத்குமார் தன்னைச் சார்மின். 61

கார் - மேகம். கதித்த - சிறப்புற்ற.

ஏற்றினில் வருவான்; கையில்
இணைப்புறு சங்கு கொள்வான்;
கூற்றினை உதைப்பான்; தீமை
குறையவே நடிப்பான்; இன்னோர்
வேற்றுருக் கொண்டு ஞானம்
விளங்கிய அருணை தன்னில்
தோற்றிடும் அவனே ராம
சுரத்குமார் என்னக் கொண்மின். 62

ஏற்றினில் - ரிஷப வாகனத்தில். இன்னோர் - இத்தகையோர்.

சால்பினைக் காணார், ஈசன்
தரும்அருள் பேணார், என்றும்
மாலினைக் கொண்டு வீணே
மயக்கத்தில் தோய்ந்தே நிற்பார்;

காலனுர் வருமக் காலைக்
காதரம் போகும் கொல்லோ?
தோல்வியொன் றில்லா ராம
சுரத்குமார் பாலே வம்மின். 63

சால்பு - சான்ருண்மை. மால் - காமம். காதரம் - அச்சம்.

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

இடர்களையும் பெருமானை, எண்ண மெல்லாம்
ஈடேறச் செய்வானை, மயல்கள் போக்கித்
திடர்என்னும் பிறப்பறுக்க வழிசெய் வானைச்
சீதரனைச் சிவனவனைப் பிரமன் தன்னை
மடல்கெழுமும் மாலைபுனை மார்பன் தன்னை
வண்ணமுறு தலைப்பாகை வனைவோன் தன்னை
நிலைபெரிய ஞானியாம் நிமலன் தன்னை
நீள்ராம சுரத்குமார் தனைக்கண் டேனே. 64

இடர் - துன்பம். திடர் - மலை. மடல் - இதழ்.

அருணைநகர் மிகவாழி! அன்பர் வாழி!
அருள்செய்யும் பரமேசன் கருணை வாழி!
தெருள்நயந்த அன்பர்தம் கூட்டம் வாழி!
சீர்பெற்ற மங்கையர்கள் சிறந்து வாழி!
மருளில்லா வகையினிலே மணத்தைப் பேசும்
மனமுள்ளார் எண்ணங்கள் வாழி வாழி!
சுருளகன்ற பெருஞானி யாகும் ராம
சுரத்குமார் பெரும்புகழ்கள் வாழி! வாழி! 65

தெருள் - தெளிவு. மருள் - மயக்கம். தம் மகளுக்கு மணம் முடிக்க ஏற்பாடு செய்தவர்கள் இதைப் பாடுகையில் சுவாமிகளிடம் வந்திருந்தார்கள். சுருள் - நேர்மையின்றி முடங்குதல்.

(13—3—1979)

## (கட்டளைக் கலித்துறை)

காலம் கடந்து சுடர்விடும் அந்தக் கடவுளரைக்
கோலம் கடந்த பிரமத்தை யார்கொலோ கூர்ந்தறிவார்?
ஞாலம் கடந்த புகழான் அருணையாம் நன்னகரில்
தூலங்கொள் ராம சுரத்குமார் தன்னைத் துதித்திடுமே. 66

தூலம் - திருமேனி.

ஓங்காரத் துள்ளே ஒளியாய் இருக்குமவ் வுத்தமனைத்
தேங்கார்வத் தோடே தியானிக்கும் உள்ளம் சிறக்கஅருள்
நீங்காத ஞானியாம் ராம சுரத்குமார் நீளடியைப்
பாங்காரப் போற்றிப் பணியுங்கள், எல்லாப் பதம்வருமே.

பாங்கு ஆர - முறை அமைய. பதம் - பதவி.

ஆணவம் அற்ற நிலைதன்னை யார்க்கும் அருள்புரிவான்;
நாணமொன் றில்லாத மெய்ஞ்ஞான வாழ்வினை நல்கிடு
பூணவும் பேசவும் ஏத்தவும் நல்ல புனிதனெனக் [வான்,
காணவும் உள்ளான்நல் ராம சுரத்குமார், கண்ணியனே!
68

வேதத்தின் செம்பொருள், ஆகம
நற்பொருள், விளங்குபத்திக்
கீதத்தின் மெய்ப்பொருள், எல்லா
மறிந்தும் கிளர்தெளிவின்
றேதப் படும்மனத் தெல்லோரும்
வந்தே இறைஞ்சுகின்றார்
சேதப் படாத அருள்ராம்
சுரத்குமார் சீரடியே. 69

தெளிவு இன்று - தெளிவில்லாமல். ஏதப்படும் - துன்பத்தை அடையும்.

அடியோங்கள் என்றே அருஞ்செல்வர்
வந்தார்; அடர்கல்வியில்
பிடியோங்கும் நல்ல புலவர்கள்
வந்தார்; பெரும்பலமார்
துடியார்ந்த மேனியர் வல்லவர்
வந்தார்; துகளறுத்தார்;
வடிவார்ந்த ராம சுரத்குமார்
பாதம் வணங்கினரே. 70

பிடி - பிடிப்பு. துடி - துடிதுடிப்பு. துகள் - குற்றம்.

ஞானம் தருவான்; நலந்தந்து மோன நவில்நிலையை
ஈனம் தராவகை காட்டிடு வான்;இவ் விரும்புவியில்
கானம் புகழ்சொலும் ராம சுரத்குமார் காலடியை
ஈனம் தவிர்வதற் கேசென்றுபோற்றி இறைஞ்சுமினே. 71

நவில் - பயிலும். கானம் புகழ் சொலும் - பாட்டுக்கள் புகழை விரிக்கும்.

கண்ணிலேகண்டதுபொய்யென்றறிந்து கருத்தொன்றியே
நண்ணுவார் நல்லவர் என்பதை நாளும் நவிலுபவன்,
விண்ணிலே காணு வியன்இன்பம் ஈயும் விரகறிவான்
தண்ணரு ளார்ராம் சுரத்குமா ரென்னும் தவஅரசே. 72

விரகு - உபாயம். ஏர் அணவ - அழகு பொருந்த. சீர் அண் - பெருமை பொருந்திய.

பூரணத் துள்ளே பரிபூ ரணமாம் பொருளினைநன்
கேரண வச்சொலும் யோகியை மோனம் இசைந்தவனைச்
சீரண் அருணைத் திருத்தலத் தில்கண்டு சேர்ந்திடலாம்,
பேரருள் ராம சுரத்குமார் என்னும் பெரியவனே. 73

சொல்லுக் கடங்காச் சுகபோகம்
மெய்ஞ்ஞானம் தோற்றுமக்கால்
புல்லும் எனஉண்மை சொல்லுகின்
றுன்இந்தப் பூவுலகில்

வெல்லற் கரிய பொறியெலாம்
வென்றவன் வீரனெனச்
சொல்லும் பெரியவன் ராம
சுரத்குமார் சோர்விலனே. 74

ஞானம் தோற்றும் அக்கால் சுகபோகம் புல்லும் - ஞானம் உண்டாகும் போது ஆன்ம இன்பம் கிடைக்கும்.

விண்ணை அளந்திடும் பேருண்டோ? இந்த மிளிர்புவியில்
தண்ணீர் அலையைக் கணக்கிடு வாருண்டோ? தாழ்நதியில்
நண்ணு மணலுக்கோர்எண்ணுமுண் டாமோ நயந்துசொலின்
அண்ணலெம் ராம சுரத்குமார் சீருக் களவுமின்றே. 75

விண்ணை - ஆகாசத்தை.

தாபம் கெடுக்கும் மருத்துவன், மாயைத் தழல்தருசந்
தாபம் கெடுக்கும் அருள்நீரைப் பாய்ச்சும் தனிமுகிலன்,
கோபம் கெடுக்கும் குருபரன், வஞ்சக் குழிகெடுக்கும்
பூபன்எம் ராம சுரத்குமார் என்னப் பொலிமுனியே. 76

தாபம் - மூன்று வகைத் தாபங்களை. சந்தாபம் - துன்பம்.

மாயை வலையில் பட்டுமா ழாந்து மதிமயங்கி
ஆய கடமை இதுவென வேயறி யாதமக்கள்
தூயனும் ராம சுரத்குமார் தன்னிடம் துன்னிவிட்டால்
மேயநல் ஞானம் வெளிப்படும்; இன்ப விளைவுறுமே. 77

இன்பமே ஆயினும் துன்பமே ஆயினும் ஏதுறினும்
அன்புடை நெஞ்சம் சிறிதும் கலங்காத அற்புதனும்,
தன்மை இதுவென் றுரைக்கவொண் ணாத தயாநிதியாம்
நன்னயன், ராம சுரத்குமார் என்கின்ற நற்றவனே! 78

ஆற்றைப்போல் நெஞ்சத் தலைகள்போல் எண்ணம் அடங்குவரேல்
கூற்றைப்போக்ச்செய்யும் ஆற்றை அறிந்திடல் கூடுமன்றே
நீற்றைப் புனைந்த சிவபெரு மானென நிற்குமவன்
தேற்ற முறும்ராம் சுரத்குமார் பாதங்கள் சேருமினே. 79

ஆற்றை - வழியை. தேற்றம் - தெளிவு.

பந்தம் அகற்றப் பலமுறை கண்டு பயின்றிடுவீர்,
சந்தம் பலபாடிக் கோயிலில் வந்து தரிசியுங்கள்;
கந்தம் கொளுந்தார் அணிகின்ற தோளன் கருதுமொரு
தொந்தம் இலாதுறும் ராம சுரத்குமார் தூயவனே. 80

முறை - உபாயம். சந்தம் - பாடல். கந்தம் - நறுமணம். தொந்தம் - பிணைப்பு.

மாயைக்குத் தோற்றுமனத்திற்கடிமையாய் வாழ்பவர்கள்
சேயுற்ற தோற்றம் கொளும்ராம் சுரத்குமார் சேவடியைப்
போயுற் றடைந்து வணங்கினால் இன்பந்தான் புல்லுமன்றோ?
தாயுற்ற அன்பினைக் காணலாம் சற்றும் தளர்வின்றியே. 81

சேய் உற்ற - குழந்தை போலுள்ள. புல்லும் - சேரும். தாய் உற்ற - தாயைப் போன்ற.

சொல்லுக் கடங்காச் சுகத்தினில் நிற்கின்ற சோதியவன்,
மல்லுக் கடங்காத பஞ்சேந் திரியம் வசப்படுத்தி
வெல்லுற்ற சூரன், அருணை நகரில் விளங்குபவன்,
கல்லும் உருக்கிடும் ராம சுரத்குமார் கண்ணியனே. 82

மல்லுக்கு - மல்லிடுதல் போல ச்செய்யும் முயற்சிகளுக்கு.

சொல்லொன்று செய்கை பிறதொன்றாச் செய்யும் துரிசுடையோர்
வல்லொன்று கின்றன ஐம்புலன் மாய்க்க வழியறியார்
கல்லொன்று வந்தாலும் உள்ளே கரைக்கும் கதியறிவான்
சொல்லொன்று காட்டிடும் ராம சுரத்குமார் தூமுனியே. 83

துரிசு - குற்றம். வல் - வன்மை.

வாதம் இடுவார், படிப்பறி வார், பல மாண்பறிவார்,
கீதம் அறிவார், கிளர்கின்ற கானம் கெழுமவரும்
வேதம் அறிவார் எனினுமக் காலனை வெல்லுவரோ?
நாதனும் ராம சுரத்குமார் பால்வம்மின்; நன்மையுண்டே. 84

கானம் கெழும - சுவரம் பொருந்த.

அகண்ட முறுசச்சி தானந்தம்
அவ்யயம் ஆன்மச்சுடர்
திகந்தம் பரவிச் செறிபொருள்
என்றே தினமுரைப்பீர்
சுகந்தரு மோ? செய்கை துன்னிட
வேண்டும்; துணிந்துசென்றே
இகந்தனில் ராம சுரத்குமார்
தன்பால் இணையுமினே! 85

அகண்டம் - பிளவில்லாத தன்மை. திகந்தம் - திசைகளின் முடிவு வரையில்.

காலம் கடந்த தனிப்பொருள், எல்லாக் கதிகளையும்
ஞாலம் தனையும் கடந்த பெரும்பொருள், ஞானமென்னும்
கோலம் கொளும்பொருள், ராம சுரத்குமார் கோலமொடு
சீலம் பலகொண்டு நிற்பதைக் கண்டுநீர் சேருமினே! 86

கதி - மார்க்கம்.

ஐய மறுமின், அடர்புலன்
ஐந்தின் அவலமெல்லாம்
நைய அருளைப் பெறுமின்என்
றேசொல்லி நாளுமன்பர்
செய்யும் வணக்கத்தைக் கொண்டுளான்
ஞானமெய்ச் சித்தர்புகழ்
மெய்யனும் ராம சுரத்குமார்
என்கின்ற மெய்ம்முனியே 87

அவலம் - துன்பம். நைய - அழிய.

பாகை அணிந்தான், நறும்பாகு
போற்சொல் பரிந்துரைப்பான்,
ஈகை உடையான், வருவார்க்குப்
பாலை இரந்தளிப்பான்,
சோக மிலாத பெருநிலம்
காட்டிடும் தூயனிவன்
ஏகன் தனையறி ராம
சுரத்குமார் என்பவனே. 88

பாகை - தலைப்பாகை. நறும்பாகு - நறுமணம் வீசும் வெல்லப் பாகு.

கானத்தைக் கேட்டுக் குதுகலிப்
பான்; நற் கவிகள்சொலின்
பானத்தைப் போலப் பருகுவான்;
வேதப் பனுவல்சொலும்
ஞானத்தைச் சொல்லால் நவின்றிடு
வான்; சுத்த ஞானியிவன்
தேனுற்ற சொல்லினன், ராம
சுரத்குமார் தேவனன்றே. 89

கானம் - இசைப்பாட்டு.

கல்லும் கரைக்கும் மொழியினன், மாந்தரைக் காசினியில்
வல்ல புலனைந்தைத் தம்நெறி போகவே வைத்திடுவான்;
நல்லவர் போற்றிய நல்லவன், யாவர்க்கும் நற்குழந்தை
சொல்லரும் இன்புகழ் ராம சுரத்குமார் தூமுனியே. 90

தம் நெறி - தமக்குரிய நல்ல வழியில்.

சேய்போல் சிரிப்பான், சிகரெட்டை
ஊதுவான், சேவடிக்கண்
யார்வந்து நிற்பினும் பொன்போலப்
பேசி இதந்தருவான்,

தார்வந்த மாலை கழுத்தணி
கின்றான், தயைபுரிவான்,
நேர்வந்த கீர்த்தியான் ராம,
சுரத்குமார் நீள்முனியே, 91

குழந்தையென் றோதக் குதுகலிப்
பானோர் குறையுமிலான்
தொழுந்தொறும் அன்பர்கள் இன்பச்
சுகம்பெறச் சூழருளை
விழுந்தயை யோடு தருகின்ற
வன்தொல் வினைப்பிறப்பில்
அழுந்துறா மல்காக்கும் ராம
சுரத்குமார் ஆம்தவனே! 92

விழும் - விரும்பும்.

## (எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

பலகற்றும் பலசொற்றும் பாங்கறியா திருக்கும்
பாமரர்கட் கென்னசொல்வேன்! பண்ணவர்கள் போற்ற
மலைபெற்ற வாறதுபோல் மாமுனியைப் பெற்றோம்;
வணங்குகின்றார் வினையெல்லாம் போக்குகின்ற கங்கை;
கலைபெற்ற அறிவெல்லாம் இவன்முன்னே தூசாம்;
காதலுறப் போற்றுபவர் இவன்பெருமை கண்டார்;
நிலைபெற்ற அருளையிலே நிமிர்ந்துநிற்கும் ஐயன்
நீதியுடை யான்ராம சுரத்குமார் முனியே. 93

பண்ணவர்கள் - தேவர்கள்.

மலமூன்றும் போவதற்கு வழிசொல்வான்; என்றும்
மாயையெனும் வலைக்குள்ளே சிக்காமல் காப்பான்;
வலமுடைய திருவருளைப் பாதுகாப் பாக்கி
மனங்குழுற வண்ணம்நற் சாந்தியினைத் தருவான்;

தலங்களுக்குள் பெருந்தலமாம் திருவருணை மேவிச்
சாந்தநிலை இன்னதெனச் சாற்றுகின்ற மெய்யன்,
குலங்களுக்கு மேலான குலத்திலுறை அப்பன்,
கோதற்ற ராமசுரத் குமாரென்னும் ஞானி. 94

வலம் - வெற்றி.

ஞானப்பால் தருவதனுல் தாயாகி நிற்பான்;
நற்சொர்க்க பூமிதரும் தந்தையென வருவான்;
ஈனப்பாங் கில்லாமல் பிறவிநோய் தீர்க்கும்
இவன்பெரிய மருத்துவனும் என்றேநாம் காண்போம்;
தானத்தால் யோகத்தால் பத்தியினுல் காணும்
தனிச்சுடரும் இவன்எனவே அன்பர்கள் நினைப்பார்;
ஈனப்பார் தனில்இனிமேல் பிறவாத வண்ணம்
இன்னருளைத் தருகின்ற ராமசுரத் குமாரே. 95

ஈனப்பார் - இழிவையுடைய பூமி.

குரங்கென்னும் மனமடங்கும் வழியினைக்காணுதே
குலைகின்ற நெஞ்சகத்தீர், இங்கேநீர் வம்மின்,
தரங்கமுறு மாறடங்கிச் சார்கின்றுற் போலே
தழைகவலை யாவையுமே மிகஅடங்க நிற்பீர்;
கரங்களால் குவித்தென்றும் கால்களையே வணங்கிக்
காதலால் நிரப்புகின்ற ராமசுரத் குமார்சொல்
வலங்கொள்ளும் வார்த்தையிலே ஞானத்தைக் காண்பீர்,
மண்ணிலே விண்ணகத்தைக் கண்டுபெறலாமே. 96

தரங்கமுறும் ஆறு - அலையையுடைய நதி.

மண்ணென்றும் பொன்னென்றும் மங்கையர்கள் என்றும்
மாயாத மூவாசை மாய்த்திடவே வேண்டின்
கண்ணென்றும் மணிபோலக் கடலமுதம் போலக்
கருதும்உடற் காவிபோல் நிற்கின்ற ஐயன்,

மண்ணின்ற பெரும்புகழோன், அருளையினில் மேவி
வருவார்கட் கருள்சுரக்கும் நற்காம தேனு,
திண்ணென்ற பெருஞானி, ராமசுரத் குமாராம்
செல்வனையே அடைமின்கள்; பேரின்பம் காண்பீர். 97

கண் ஒன்றும் மணி - கண்மணி. திண்ணென்ற - உறுதியையுடைய.

சிவனென்றும் மாலென்றும் முருகனென்றும் பேசிச்
சித்தாந்தப் படுத்தியங்கே சண்டைமிக மூட்டி
அவனென்று மிவனென்றும் பெரியனென்றும் சிறியன்
அவனென்றும் சொலிச்சொல்லி வீணேநாள் போக்கி
நவம்ஒன்றும் மெய்ஞ்ஞான நிலையையறி யாது
நானிலத்தில் பிறந்திறந்து வரும்நோயைப் போக்கத்
தவம்ஒன்றும் பெருஞானி ராமசுரத் குமாரைத்
தழையருளு சலத்தினிலே கண்டுபணி வீரே. 98

நவம் - புதுமை. ஒன்றும் - பொருந்திய.

யோகத்தில் மூச்சடக்கி இருந்தாலும் அங்கே
யுத்தத்தைச் செய்கின்ற மாயையுண்டு கண்டீர்;
சாகத்தான் வாழ்வெடுத்த பேர்களையே போலச்
சதா ஆசைப் பட்டுழன்று வீணேநீர் மாள்வீர்;
போகத்தால் ஒன்றுண்டோ? ஞானத்தால் உண்டாம்;
பொதுவழியைக் காட்டுகின்ற அண்ணலாம் ஒருவன்
ஏகத்தான், பெயர்ராம சுரத்குமார் என்பான்,
இங்கேநீர் வந்திடுவீர், யாவையுமே காண்பீர். 99

ஏகத்தான் - ஒன்றையே அறிந்தவன்.

சித்தாந்தம் பேசிடலாம்; வேதாந்தம் பேசிச்
சிறப்புற்றே சேர்ந்திடலாம்; காசினியில் பொருளை
ஏதாந்தம் குறையெல்லாம் போக்குதற்கே ஈட்டி
இவன்போலச் செல்வனுண்டோ எனவேநின் றிடலாம்;

சூதாம்பொய் வாழ்க்கையிலே கடைசியிலே வந்து
தொல்லைதரும் காலனவன் வருங்காலை நீங்கள்
ஏதாங்கண் செய்வீர்கள்? அதைஓர்மின்; இங்கே
எய்திடுவீர் முனிராம சுரத்குமார் மாட்டே. 100

காசினியில் - உலகத்தில். தம் குறை ஏதோ அதையெல்லாம். ஏது ஆங்கண் செய்திடுவீர்கள் - அப்போது என்ன செய்வீர்கள். ஓர்மின் - எண்ணுங்கள்.

மீன்பிடிக்கக் காத்திருக்கும் வலைஞன்போல் ஆவி
விழுங்காலை வலைபோடக் காலன்வரு வான்காண்;
நான்பிடித்தே அகங்காரம் கொள்ளுபவர் எல்லாம்
நாசமாய்ப் பொய்வாழ்வை வீணுக்கு வாரே;
தேன்பிடித்த திருச்சொல்லான் ஞானமுனி அருணைத்
திருநகரில் வாழ்கின்ற ராமசுரத் குமாராம்
கோன்பிடித்த நெறியினிலே சென்றவன்பால் கூடிக்
குளிரடியே தஞ்சமென வீழ்வீர்கள் நன்றே. 101

நான் பிடித்தே - நான் என்னும் சொல்லைப் பற்றி.

திண்ணமென எத்தனைநாம் சொல்லுகின்றோம்? இங்கே
சேர்கின்ற யாவையுமே பொய்யாகிப் போகும்;
எண்ணமெலாம்பொய்யாரும்;பேச்செல்லாம் பொய்யாம்
இயற்றுகின்ற செயலெல்லாம் பொய்யாகும் என்றே
நண்ணறிவில் கூர்ந்தறிந்து பார்த்தனிரேல் நீங்கள்
நாளும்நல் ஞானத்தைப் பெறுவதற்கு முயல்வீர்.
அண்ணலவன் திருவருணை நகர்தன்னில் இருப்பான்,
அருள்ராம சுரத்குமார் தன்பாதம் சேர்மின். 102

கூர்ந்து அறிந்து - நுணுகி அறிந்து.

பூமிபெரும் காடதனில் உணர்ச்சியிலா மாந்தர்
பொலிகின்ற விலங்கினங்கள், மாயையெனும் அதனுள்
நாமிருப்போம்; இதனிடையே நல்லருளைக் கூட
நயந்திடுவீர், இங்கருணை நகரினிலே உள்ளான்;
சாமியெனக் கும்பிடலாம்; குழந்தையெனக் களித்தே
தயைதன்னைப்பெற்றிடலாம்; அவன்தான்யார் என்றால்
நாமமது ராமசுரத் குமாரன்என வந்தான்;
நலியாமல் காப்பாற்றும் நளினபதத் தானே. 103

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பாம்;
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணும்;
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவாம்;
நாதாந்த மேல்நிலைமேல் ஞானவடி வோனும்;
வல்லார்க்கும் வல்லவனும் மாயோகி அருணை
வாழ்கின்ற பெருமானும் பேரண்ணல், சாந்தம்
புல்லார்க்குத் தெரிவரியான், ராமசுரத் குமாராம்
புங்கவனை வந்தடைமின், சங்கடங்கள் போமே. 104

புங்கவன் - தேவன்.

கடன்உண்டென் றேமாந்து பொருள்தன்னைத் தேடிக்
காசினியில் காசுக்கே நாள்தன்னை அழிப்பார்;
அடல்உள்ள உடலென்றே இன்பத்தைத் தேடி
அரிவையர்பால் மோகங்கொண் டழிவார்கள் பல்லோர்;
சுடர்கின்ற நன்ஞானம் வேண்டுமென்றே தேடிச்
சுயமுயற்சி செய்வார்கள் மிகஅரியர் தாமே;
அடர்கின்ற மாஞானி ராமசுரத் குமாரை
அடைமின்கள், நன்னெறியில் செல்லும்வழி யாமே. 105

அடர்கின்ற - செறிகின்ற.

அகங்காரப் புலிவந்தே சாந்தமெனும் மானை
அடுகின்ற நிலையறியீர்; ஆதலால் இங்கே
சுகங்காண வேணுமெனில் அகங்காரம் போக்கித்
தூயமனம் அடைதற்கே சொல்லுகின்றேன் வழியை;
மகங்காணும் பலனெல்லாம் வந்ததென இங்கே
மலர்முகத்தோ டின்சிரிப்பைக் காட்டுகின்ற செல்வன்
நகங்காணும் அருளையினில் ராமசுரத் குமார்தன்
நளினவடி சேர்மின்கள்; நல்லவழி உண்டாம். 106

மகம் - யாகம். நகம் - மலை, நளின அடி - தாமரையைப் போன்ற திருவடிகளை.

குறைகாணுத் தாய்போலக் குளிர்ச்சிதரும் தேயன்,
கொடுமனத்தின் துரிசெல்லாம் அழிக்கின்ற தூயன்,
மறைஉறையும் பொருளெல்லாம் மலர்கின்ற வாயன்,
வானவர்தம் பதமெல்லாம் அளிக்கின்ற நாயன்,
நறைநிறைந்த மொழிபுகலும் நல்லபெரும் சேயன்
நாள்நாளும் அன்பர்கள் போற்றிசெயும் நேயன்
துறைபடிந்த கலைகளெல்லாம் வளர்க்கின்ற ஆயன்
கோதில்லா ராமசுரத் குமாரென்னும் முனியே. 107.

தேயன் - தேசுடையவன். நாயன் - தலைவன். நறை - தேனின் சுவை. சேயன் - குழந்தை போன்றவன். ஆயன் - தலைவன்.

காட்டினிலே மலைகளிலே கடற்கரையில் சென்று
கருத்தழியத் தியானத்தில் இருக்கின்ற நிலையை
ஓட்டிடுவீர்; அதுமிகவும் அரியதுவாம் கண்டீர்;
உள்ளமதில் நெகிழ்ந்தன்பு செய்கின்றீர் ஆயின்,

நாட்டமெல்லாம் ஒருநாட்ட மாகவந்து நின்ருல்,
ஞானமிது என்பதனை நன்குதெளி வீர்கள்;
கூட்டுமருள் வழங்குபிரான், திருவருணை மேவும்
கொள்கையினன், ராமசுரத் குமாரரென்னும் தவனே. 108

சொல்லாத மேல்நிலைமேல் சுத்தசிவ மார்க்கம்
துன்னுகின்ற நெறிசேர்ந்து செயல்கள்செய் யாமல்
வித்தமெலாம் வீணுக்கி நாளையுமே போக்கி
விரகறியா துழல்கின்ற மாந்தர்காள், கேண்மின்:
சித்தமெலாம் ஒருமிக்கச் செயல்இழந்து நிற்கச்
சீவன்இந்த உடம்பினிலே நிற்கின்ற போதே
அத்தனைக்கண் டுறுகின்ற ராமசுரத் குமாரை
அடைமின்கள்; இடரெல்லாம் அடியோடே போமே. 109

வித்தம் - செல்வம். விரகு - உபாயம்.

பணம்வேண்டு மென்பவரும் பலம்வேண்டு மென்று
பயில்கின்ற மாந்தர்களும் கவலைகள் கொண்டு
குணம்மறந்த மாந்தர்களும் வந்திங்கே கூடிக்
குலவுகின்ற கவலையெல்லாம் போக்கிடுகின் ருரே;
நிணம்வேண்டும் உடல்வாழ்க்கை பெற்றதனுல் இங்கே
நித்தநித்தம் கண்டதென்ன? துயரொன்று தானே?
எணம்வேண்டும் சாந்தத்தை எய்துதற்கு வேண்டின்
எழில்ராம சுரத்குமார் தம்பாலே வம்மின். 110

நிணம் - ஊன். எணம் - எண்ணம்.

கல்வியினுல் பயனுண்டோ? செல்வத்தால் காணும்
கவின்பயன்தான் வேறுண்டோ? யாவும்இவ் வாழ்வில்
நல்வித்த மாகும்ஆம் நன்றெனினும் ஞானம்
நல்கிடுநல் வழிதனையே சேர்ந்திடுதல் வேண்டும்.

சொல்வித்தை யன்றுண்மை சொல்கின்றேன் கேண்மின்;
தூயதிரு அருணையிலே சென்றங்கே காணும்
பல்வித்தை யுற்றஇந்த ராமசுரத் குமாரைப்
பதம்பணியும்; நெஞ்சகத்தில் சாந்தமடை வீரே. 111

வித்தம் - பொருள்.

இங்கேதான், இருப்பேனோ, அங்கேபோ வேனோ?
யாவர்என்னை என்னசொல்வார் எண்றெண்ணி எண்ணிச்
சங்கேதம் பலநாடிச் சந்தேகம் கொண்டு
தவிமனத்தில் கவலைகள் மண்டிமிக வாடும்
பங்கேறும் உளமுடையீர், இங்கேநீர் வம்மின்,
பலகவலை உம்மிடத்தே பாயாமல் செய்வான்;
சங்கேந்தும் திருமால்போல் ராமசுரத் குமாராம்
தவமுனிவன்; ஆதலினால் தாளிணையே சார்மின். 112

சங்கேதம் - குறிப்பு.

கனைக்கின்ற சிங்கம்போல் தோற்றமது கொள்வான்;
கவின்குழந்தை எனநாளும் பெருஞ்சிரிப்பைச் சிரிப்பான்;
மனக்குன்றம் அதிலேறி நிற்கின்ற செல்வன்,
வாழ்வெல்லாம் நல்வாழ்வாய் வைத்திருக்கும் வள்ளல்
எனக்கொன்றென் றில்லாத பெருஞானத் தவத்தோன்
இழிவறியாப் புகழறிவான், யாரேவந் தாலும்
தனக்குன்றம் போலருளை வழங்கிடுவான்; அவன்தன்
தாளடைந்தே எந்நாளும் பயன்பெறுவீர் நீரே. 113

கவலையெல்லாம் போவதற்கு வழிசொலுவேன் கண்டீர்
கனத்தபெருங் கவலையெல்லாம் போக்கியின்பம் பெறலாம்
அவலமுறும் சிறுவாழ்வில் உறவால்நட் பாலே
அடைகின்ற துன்பினின்றும் விடுதிபெறல் உண்டாம்;

நவமணியால் பெருந்தனத்தால் பெரும்புகழால் நன்மை
நாமடையோம்; மெய்ஞ்ஞான போதமென்னும் சாந்தி
அவிர்கின்ற திருமனத்தான் ராமசுரத் குமார்பால்
அடைமின்கள்; கவலையெல்லாம் கால்விட்டே ஓடும். 114

வஞ்சநெஞ்சர் தமக்கரியான்; அன்பர்களுக் கருளை
வழங்கிடுவான்; நம்பிக்கை கொள்வோர்தம் பாலே
நெஞ்சமெலாம் நெகிழ்ந்துருகி நிற்கின்ருன்; என்றும்
நிலையான பெருவாழ்வை ஈகின்ற வள்ளல்;
தஞ்சமுற அடிவணங்கும் தொண்டர்களுக் கெல்லாம்
தாயாகித் தந்தையாய்க் குருவாகி நிற்பான்;
நெஞ்சத்தில் சிறிதேனும் வஞ்சமிலா ஐயன்,
நீள்ராம சுரத்குமார் எனும்பெரியன் ஆமே. 115

சொல்லடங்காப் பெரும்புகழோன் தன்புகழைச் சொல்லச்
சொல்லுண்டோ? எல்லையுண்டோ? வரையறை யொன்றுண்
மல்லுண்ட மாயையினைப் போக்குவிக்கும் ஞானம் [டோ?
வழங்குகின்ற ஞானியிவன், ராமசுரத் குமாராம்;
வில்லுண்ட அம்பென்ன வேகமுற அவன்தன்
விரையடியைப் பணிமின்கள்; ஞாலத்தில் வாழ்க்கை
அல்லுண்ட வாழ்வாக அமையாமல் நல்ல
அருள்வெளியாய் நிற்குமென அறைகின்றேன் யானே. 116

விரை அடி - மணமுள்ள திருவடி. அல் உண்ட - அஞ்ஞானத்தால் கவரப்பட்ட.

சாந்தமலை யாய்நின்ற தவமுனிவன், ஞானத்
  தனிக்கடலாம், அன்பர்தம் மனஇரும்பை ஈர்க்கும்
காந்தமென நிற்கின்ற பெரும்புகழோன், யாரும்
  களிப்படையச் சிரிக்கின்ற குழந்தைபோல் இருப்பான்,
நீந்தரிய பிறவியினை நீந்தவழி செய்வான்,
  நிலையான சீர்வாழி! அவனுடைய இடத்தே
ஏந்துமன்பிற் செல்லுகின்ற அன்பர்கள் வாழி!
  இரும்புவியும் வாழி! என்றும் அருள்மிகவா ழியரோ!
117

(4-5-1979)

## [16-8-1979 அன்று பாடியவை]

### (அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

வேத நாயகன் விமலர்தம் நாயகன்
  விளங்கொளி படைத்திருக்கும்
பூத நாயகன் பூமகள் நாயகன்
  புலவர்கள் தாமெல்லாம்
ஓதும் நாயகன் அருணையில் மேவிய
  உத்தமன் கழல்போற்றி
நாத னாகிய ராம்சுரத் குமார்தனை
  நண்ணுவார் வினையிலரே. 118

பூதநாயகன் - உயிர்களின் தலைவன். பூமகள் நாயகன் - திருமால்.

வாம மாகிய ஞானங்கள் வந்துறும்;
  மதியெலாம் தெளிவாகும்;
சேம மாகிய சாந்தியே உள்ளத்தில்
  திகழுமால் என்றென்றும்;
காம மாதிய பகைகளை நீக்கியே
  கருணையாம் எல்லைக்குள்
சேம மாகிய ராம்சுரத் குமாரிடம்
  செவ்வியிற் சேர்மின்கள். 119

வாமம் - நன்மை. செவ்வியில் - நல்ல சமயத்தில்.

(பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

மாதவம் புரிந்துபல நோன்புகள் இழைத்துடலம்
வருந்தவே கானிலெய்தி
வாழ்ந்திடும் முனிவோரும் கண்டிலா அப்பெரிய
உண்மையை மனம்கொள்ளுவான்;
சேதனு சேதனம் யாவையும் நீத்திடச்
செப்புவான், மோனஞானம்
திகழ்வதிந் நிலையிலே என்றுநற் பக்குவம்
சேர்ந்திடச் செய்தருளுவான்;
நீதமார் அன்பர்கள் நித்தலும் போற்றிடும்
நேயமார் சுகுணஞானி
நேர்வரு வார்தமை மைந்தராக் காத்துநன்
நியமமார் தரச்செய்குவான்;
வாதமே தான்இலாச் சாந்தியம் புவனத்தில்
வளர்ந்திடும் பெரியஞானி;
மலையெனும் அருணையில் ராம்சுரத் குமாரென
வளர்பவன் சென்றுகாண்மின். 120

நீதம் - நீதி.

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

சத்தென்றும் இன்பமென்றும் ஆனந்தம் என்றும்
தனித்தனியே நிற்கின்ற பொருளெல்லாம் ஒன்றாய்
வித்தொன்றும் முளையாகி மரங்கள்தாம் ஆகி
மேல்இவர்ந்த படியென்ன அருள்நிழலை ஈயும்
சத்தொன்றும் பெருமானைத் திருவருணை தன்னில்
தரிசனம்செய் தார்கள்தம் இன்னலெலாம் போக்கி
மத்தமொன்றும் மதியில்லா வகையினிலே சாந்தி
வழங்குவான் எனவங்கே வந்தவர்கள் காண்பார். 121

இவர்ந்த - ஓங்கிய. இன்னல் - துன்பம். மத்தம் - மயக்கம்.

காண்பரிய சோதியாய் மறைதனக்கும் அரிதாய்க்
காணுகின்றபொருளுக்கும்காண்பதற்கும் அரிதாய்ப்
பூணுகின்ற மோனநிலை தன்னிலே நிற்பார்
பொற்புறவே அறிகின்ற பெரும்பொருளே ஆகி
நாணுகின்றோர் தமக்கரிதாய் நல்லோர்கள் தேசாய்
ஞானமுறும் பீடமாய் இருக்கின்ற பொருளைத்
தாணுவென நந்தமக்குக் காட்டுகின்ற நம்பன்
சார்ராம சுரத்குமார் யோகியெனும் ஞானி. 122

மறை - வேதம். தேசாய் - சோதியாய். தாணு - சிவபெருமான்.

கல்லாதார் வந்தாலும் கற்றவர்கள் வரினும்
காதலுடன் குழந்தைபோல் வரவேற்றே சிரிப்பான்;
அல்லார்கள் ஆனாலும் வல்லவர்கள் எனினும்
அவர்க்கெல்லாம் பேரருளை ஈந்துநலம் தருவான்;
சில்ஐயம் உளத்தகத்தே இருக்கின்ற காலைத்
திகழுமவன் திருமுன்னர் நின்றாலே போகும்;
புல்லர்கள் அறியாத பெருமையுள ஞானி
பொற்புடைய ராமசுரத் குமாரென்னும் ஐயன். 123

சில் ஐயம் - சில சந்தேகங்கள். புல்லர்கள் - இழிந்தவர்கள்.

உலகெல்லாம் ஒருபொருளே இயங்குகின்றதென்பது
ஓர்மினென எந்நாளும் சொல்லிநமை உய்ப்பான்;
பலகலையும் கற்றோர்கள் வருவார்கள், பணிவார்;
பாமரர்கள் அவன்பாலே மிகப்பத்தி செய்வார்;
கலகமிடும் சமயமெலாம் அவன்முன்னே சென்றால்
காணுமே பட்டொழியும்; சாந்திவரும் அங்கே;
அலகிலதாம் பெரும்புகழ்சேர் அருணைநகர் தன்னில்
அருள்செய்யும் ராமசுரத் குமார்தன்னைப் பணிமின்.

ஓர்மின் - சிந்தியுங்கள். உய்ப்பான் - நடத்துவான். அலகு - அளவு.

பணியாதார் ஆனாலும் பணியச்செய் கின்றான்;
பாம்படக்கும் மந்திரம்போல் நன்மொழியைப் பேசி
அணியார்தம் பாலிருக்கும் அவலத்தைத் தீர்ப்பான்;
அகங்கார முறுவார்க்கே அடக்கமுறச் செய்வான்;
திணிவாரும் நெஞ்சகத்தான்; காமமெனும் பகையைச்
செத்தொழியச் செய்கின்றான்; எந்நாளும் போற்றி
மணிவாரும் சிரிப்பினிலே உள்ளத்தைக் கொள்வான்;
வளர்கின்ற ராமசுரத் குமாரென்னும் யோகி. 125

அணியார் - சமீபத்தில் வருகிறவர்கள். அவலத்தை - துன்பத்தை. திணி - திண்மை. மணி வாரும் - முத்தைப் போன்ற.

வேதங்கள் அறைகின்ற பொருளையார் அறிவார்?
மேலாகும் சிதானந்த வாழ்வையார் அறிவார்?
போதங்கொள் ஞானியர்தம் பாலேநாம் சென்று
புக்கிருந்தால் உபதேசம் செய்வார்கள் என்பார்;
யாதெங்கே இருக்குமென யார்அறிவார்? அருணை
எழில்நகரில் வந்தக்கால் ராமசுரத் குமாரை
நீதமுடன் கண்டக்கால் நெஞ்சவலம் ஓயும்;
நித்தலுமே சாந்தியுள்ளே நிலைபெறுதல் ஆமே. 126

நீதம் - நீதி.

பலகேள்வி கேட்பதற்கா வந்துமுன்னே அமர்வார்;
பாங்குடனே அவன்ஏதோ சொல்வான்;அப் போது
கலகமுறும் நெஞ்சகத்தில் சாந்தியினைக் காண்பார்;
கழறுகின்ற பொருள்எல்லாம் விடையாகக் காண்பார்;
சிலகலைகள் பலகலைகள் எல்லாமே சேர்ந்து
திருவுருவாய் இருக்கின்ற ஐயனெனச் சொல்வார்;
மலருறுநற் கூந்தலார் காமத்தை ஒழித்த
மாஞானி ராமசுரத் குமாரென்னும் ஐயன். 127

கழறுகின்ற - சொல்கின்ற.

குழந்தைபோல் சிரிக்கின்றான்; வருவார்கள் தமக்குக்
 கூறுகின்ற உரையினிலே சாந்தியினை அளிப்பான்;
தொழுந்தோறும் ஞானியாய்க் கடவுளாய் நிற்பான்;
 துக்கமெலாம் போவதற்கோர் வழியினையும் சொல்வான்;
விழுந்தடைந்தார் தமைக்காக்க மிகஅருளைச் செய்வான்;
 மேலான பொருளெல்லாம் இவன்மொழியில் காண்
தழுதழுக்கக் கண்ணீரை விடுகின்றார் பாலே [போம்;
 தாயாகி ராமசுரத் குமார்யோகி நிற்பான். 128

வருவார்க்குப் பாலளித்தீங் கன்னையே போல்வான்;
 வானமெனும் நிலத்துக்கு மேலான பூமி
தருவான்போல் தந்தையென நிற்கின்ற பெம்மான்;
 சார்கின்ற ஐயமெலாம் தெளிவிக்கும் குரவன்;
மருவாரும் கூந்தலர்தம் காமத்தைப் போக்கி
 மாட்சிபெறு ஞானமெனும் நல்லருளை ஈவான்;
தெருவாரும் விளையாடல் மிகமிகவே புரிவான்;
 சித்தனிவன் ராமசுரத் குமார்யோகி அம்மா! 129

மேலான பூமி - முத்தி. மரு - வாசனை.

மனத்தைமிக அடக்குகின்ற சித்துப்போல் உண்டோ?
 மாயையினால் மனம்லையும் நிலையெல்லாம் காப்போம்;
வனத்தகத்தே சென்றாலும் நெஞ்சடங்கல் இல்லை;
 மாஞானி முனர்நின்றால் சாந்திபெறு கின்றோம்;
இனத்தகத்தே ஆசைவைத்தே எப்போதும் இங்கே
 இருஞ்செல்வம் ஈட்டிடுவோம் என்றிருப்பார் காணார்;
புனத்தகத்தே தினைமேவும் வள்ளியணை நாதன்
 பொற்பெனவே ராமசுரத் குமார்தானே நிற்பான். 130

இனத்தகத்தே - உறவினர்களிடத்தில். புனம் - தினைக்கொல்லை.

பொல்லாங்கெல் லாம்போக மனமடங்கி நிற்கப்
 பொற்புறுநற் சிதானந்த வாழ்வினிலே ஆரும்
நல்லார்கள் யாவர்அவர் இங்கேவந் துறுவார்;
 நாட்டத்தில் சிவஞான யோகியிவன் என்பார்;

அல்லாத பேர்க்கெல்லாம் இவன்பித்த னுவான்;
அவன்சொல்லை யார்கேட்பார் என்றுரைத்தே திரிவார்;
கல்லார்கள் ஆனாலும் காதலுடன் வந்தால்
கருணைபெற லாம்ராம சுரத்குமார் மாட்டே. 131

பொல்லாங்கு - தீமை. ஆகும் - இருக்கும்.

ஓங்காரப் பொருளாகி வேதமெனும் உறையுள்
உறைகின்ற மேம்பொருளாய் இருக்கின்ற பிரமம்
யாங்காணும் வகையின்றால்; அதன்தன்மை யாவர்
இங்கெடுத்தே இசைப்பார்கள்? எல்லாம்பொய்என்றே
தாங்கெடுத லோடுபிறர் தம்மையுமே கெடுக்கும்
தன்மையுளார் மலிந்தஇந்த உலகத்தில் அம்மா
யாம்கண்டேம் நீகாணக் காட்டுவேம் என்னும்
இயல்புள்ளான் ராமசுரத் குமாராகும் யோகி. 132

கல்லாத கல்வியெல்லாம் கற்றார்கள் மாட்டுக்
கதிர்விடுநல் உள்ளத்தே சோதியென நிற்பான்;
நல்லார்க்கு நல்லவனாய் நம்பினவர் தமக்கே
நாட்டத்தில் மிகநன்மை காட்டுகின்றான் இவனே;
பொல்லாதார் ஆனாலும் இவன்முன்னே போந்தால்
புக்கடங்கிச் சாந்தியொடும் நிற்கின்றார் அம்மா!
எல்லாமாய் அல்லதுமாய் இருக்கின்ற பொருளை
இவன்காட்டு கின்றான்ராம் சுரத்குமார் ஞானி. 133

பலபேசிப் பலசொல்லிப் பலகாலும் திரிந்து
பலர்பாலே ஐயங்கள் கேட்டிருந் தாலும்
சிலசொல்லக் கற்கின்ற பெரியார்தம் மாட்டே
திகழும்ஒரு சொல்ஐயம் போக்குகின்ற தென்பார்;
அலகில்லா ஐயங்கள் இருந்தாலும் அவன்பால்
அரைக்கணத்தி லமர்ந்திருந்தால் நாமேதான் தெளி
நிலைபெரியான் திருவருணை மாநகரில் மேவும் [வோம்;
நீதனவன் ராமசுரத் குமாராகும் யோகி. 134

மணமாரும் மலரினிலே வண்ணமெலாம் ஆகி
மணத்துக்குள் அநுபவிக்கும் இன்பநலம் ஆகிக்
குணமாகிக் குணத்தினுக்கோர் சீகரமும் ஆகிக்
கூர்கின்ற இன்பத்துள் இன்பமே ஆகி
எணமெல்லாம் போக்குகின்ற உபசாந்தி ஆகி
ஏறுகின்ற ஏற்றமெலாம் தன்னுருவம் ஆகி
நிணம்மாற உடல்கொண்டான் ராமசுரத் யோகி;
நினைப்பார்கள் உள்ளத்தே அமுதம்தந் திடுவான். 135

கூர்கின்ற - மிகுகின்ற. நிணம் - ஊன்.

யார்கண்டார், உலகத்தில் எங்கிருப்பான் ஞானி
என்றேதான் பலர்சொல்வார்; இவ்விடத்தே வந்து
நேர்கண்டு பார்த்திடலாம்; திருவருணை தன்னில்
நிலவுகின்ற ராமசுரத் குமாரிடத்தே சென்றால்
பார்ஒன்றும் ஒருஞானம் பலித்ததெனக் கண்டே
பாங்குடனே அவன்சிரிப்பில் மயங்கிவிடு வார்கள்;
ஊர்கண்ட மெய்இதுவாம்; உலகமெலாம் கண்டே
உவக்கின்ற உண்மையிதைக் கண்டேநீர் வம்மின். 136

தழல்கண்டால் ஒளியிருக்கும்; தழலைத்தான் தீண்டில்
தன்கையைச் சுட்டுவிடும்; அதுபோல ஞானி
தொழல்கண்டால் நலமாகும்; குறும்புதனைச்செய்தால்
துயர்மிகவே ஆகும்; இதைக் கண்டிடலாம் இங்கே;
விழல்கண்டு மனமுருகி வருகின்றார் தமக்கு
மேன்மையுற நல்லுரைகள் சொல்கின்றான் அன்றே;
அழல்கண்டால் தேற்றுகின்றான்; ராமசுரத் குமாராம்
அவன்கண்டீர் பெருஞானி; இது திண்ணம் திண்ணம்.

தழல் - நெருப்பு. தொழல்கண்டால் - தொழுதால். விழல் - வணங்குதல்.

மனமயங்கி வேசாறிப் பொருளெல்லாம் தோன்று
வாழ்க்கையிலே பலகலையும் அறிந்ததனால் என்னும்?
இனம்பலரோ டிருந்தாலும் அறிவுசிறி தில்லா
இனத்தினுல் என்னபயன் உறுவர்தாம்? நம்பால்
கனமிகுத்த ஞானஉரை சொல்வாராம் என்னில்
கருணையத னல்பிழைப்போம்; ஆதலினுல் இங்கே
மனமுருக்கும் வகையினிலே அருணைநகர் தன்னில்
வம்மினிங்கு ராமசுரத் குமார்தன்னைக்காண்மின். 138

வேசாறி - அயர்ந்து.

அலையலையாய் எண்ணமெலாம் கோடியாய் நின்றே
அலைக்கழிக்கும் புன்மனத்தைச் சாந்தியுற வைக்க
நிலையுறவே பேரின்பம் காண்பதற்கு வேண்டின்
நீங்களிங்கே வம்மின்;இந்த அருணைதனில் வந்தே
கலையுறவே சிறிதின்றிச் சாந்தியினைக் காட்டும்
கண்ணியவான் ராமசுரத் குமாரிடமே வம்மின்;
அலையுறலே இல்லாத நெஞ்சகத்தில் இன்ப
அமைதியினைக் கூடிடலாம்; இதுதிண்ணம் திண்ணம்.

வீட்டகத்தே இருந்திடுவான்; அதன்பின்னர்ச் சிறிதே
வெளியினிலே திரிந்திடுவான்; தேர்முட்டி யினிலே
நாட்டமுற வணங்குபவர் தமக்கரிய காட்சி
நல்கிடுவான்; சிலகாலை எங்குள்ளான் என்றே
கேட்டவரும் அறியாமல் எங்கோபோய் ஒளிப்பான்;
கிளர்கின்ற இவன்பித்தன் என்றுசொலல் உண்மை;
வாட்டமில்லா மனத்தோர்கள் வந்தடைந்தால் இன்ப
மாட்சியினைக் காட்டுகின்ருன் ராமசுரத் குமாரே. 140

ஞானியர்கள் முன்னுளில் பலர்இருந்தார், இந்நாள்
நாம்காண யாருமிலை என்றுசொலல் வேண்டாம்;
மோனமுறும் மெய்ந்நிலையைக் கண்டவர்கள் இங்கே
முழுத்துறவோ டிருக்கின்ருரிறைவனருள் தனக்கும்

ஈனமுறல் உண்டோ? மற் றதற்குமுடி வுண்டோ?
இந்நாளில் ஒருஞானி தனைக்காண வேண்டின்
சானமுறல் வேண்டாம்நல் லருணைதனில் சென்றே
சார்ராம சுரத்குமார் எனுமவனைக் காண்மின். 141

சானம் - தியானம்.

திண்ணமுறு நெஞ்சகத்தில் சாந்தியுறல் வேண்டின்
சீறுகின்ற சினமென்னும் பகைகடிய வேண்டின்
எண்ணமெலாம் அலைக்கின்ற கவலையறல் வேண்டின்
எழும்காமப் பெரும்பகையை அழித்திடவேவேண்டின்
நண்ணுபகை யாகின்ற பொல்லாத குணங்கள்
நாள்நாளும் நலியாமல் இருப்பதற்கு வேண்டின்
மண்ணுலகில் அருணைதனில் வம்மின்; நீர் அங்கே
வளர்ராம சுரத்குமார் திருவடியில் வீழ்மின். 142

திண்ணம் - உறுதி.

நாய்வந்து வாலாட்டும்; மனிதர்கள் வந்தே
நல்லனிவன் என்றடியில் வணங்கியே நிற்பார்;
தாய்வந்த தன்மைபோல் அன்பினால் வந்தார்
தாமுண்ணப் பாலருள்வான்; தயிருமருள் கின்றான்;
பேய்வந்த கோலத்தில் இருக்கின்ற மனத்தைப்
பிசைந்தெடுத்துச் சாந்தியினால் அபிஷேகம் செய்வான்;
சாய்கின்ற நிலையின்றி நிலைநிறுத்தி வைப்பான்;
சாற்றுபுகழ் ராமசுரத் குமாராகும் யோகி. 143

நாய் - சாய்பாபா என்ற நாய்.

ஆணவமாம் பகைபோக்கி மாயையெனும் பேயை
அடியோடே அழித்துவிட்டான்; காமமெனும் பகையை
நீணுதல்இல் லாதபடி வித்தோடே கருக
நிமிர்கின்றான்; வந்தவர்க்குக் கருணைமொழி ஈந்து

கோணுதல்இல் லாதஉளச் சாந்தியினைக் கூடக்
கூறுகின்றான் நன்மொழியைக் குழந்தையைப் போல
மாணுடைய சிரிப்பெல்லாம் சிரிக்கின்றான்; இந்த
மாஞானி ராமசுரத் குமார்போலே உண்டோ? 144

நீணுதல் - நீளுதல். மாணுடைய - பெருமையை உடைய.

அருணையிலே வந்திருந்தால் சோதிமலை தன்னை
அன்போடே பார்த்திடலாம்; திருக்கோயிற் குள்ளே
தருணமுறு சிவலிங்கம் கண்டிடலாம் என்றே
தாம்வருவர்; இக்காலை மற்றொருநன் மூர்த்தி
கருணையுற இருக்கின்றான்; அவன்யாரோ என்னின்,
காணுமின்நீர்; ராமசுரத் குமாரென்னும் பேரால்
தெருள்நயப்பார் வந்தடிவீழ்ந் திடஅருளைச் செய்யும்
சிற்பரனும் மாயோகி இருக்கின்றான் அம்மா! 145

தருணம் - சமயம். தெருள் - தெளிவு.

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

இம்மா நிலத்தில் பொருள்களெல்லாம்
என்றும் இருக்கும் எனஎண்ணிச்
சும்மா போதைப் போக்குகின்ற
சுமடர் தம்மால் என்பயனும்?
விம்மா நின்றே மனமுருகி
விரைந்து கண்ணீர் மிகப்பெருக்கி
அம்மான் ராம சுரத்குமார்
அடியில் வீழ்வீர், நலமுண்டே. 146

சுமடர் - அறியாதவர்.

ஆசை போக வேண்டுமெனின்
அகந்தை நீங்க வேண்டுமெனின்
மாசார் உளத்தில் மாயையெனும்
மாய விலங்கை அறஎண்ணின்

பேசா மோனம் பெறஎண்ணின்
பீடார் இன்பம் கொளஎண்ணின்
ஆசா பாசம் துறந்துயர்ராம்
சுரத்கு மார்பால் அடைமின்கள். 147

மூல பலத்தைப் போக்கிஅந்நாள்
மூளும் வெற்றி இராமன்பால்
கோல வந்த தென்பார்கள்;
குறுகும் நெஞ்சில் இருக்கின்ற
ஞால மாயை தனைப்போக்க
நாடு வாரும் உண்டுகொலோ?
சீலம் சிறந்த ராமசுரத்
குமரன் பாலே சென்றடைமின். 148

போதம் வேண்டாம்; கல்வியிலே
பொற்பும் வேண்டாம்; மூச்சடக்கி
நாதம் காணும் யோகநிலை
நண்ணல் வேண்டாம்; அன்பினிலே
சீதம் நிறைந்த கண்ணிணையில்
செறிநீர் வார வந்திடுமின்;
நாதன் ராம சுரத்குமார்
நன்மை யீவான் இவ்வுலகில். 149

போதம் - அறிவு.

அன்பொன் றாலே உலகமெலாம்
அடிமை ஆக வைக்கின்றான்;
பொன்னைத் தாலும் வாராத
பொற்பை யெல்லாம் வைக்கின்றான்;
என்பெற் றிடினும் மனச்சாந்தி
இல்லா விட்டால் என்பயனும்?
இன்புற் றிடவே ராமசுரத்
குமார்பா லேநீர் எய்திடுமின். 150

சோறு படைத்துத் தின்பதற்கே
துகளில் நிலத்தில் வந்திருந்தோம்;
ஈறு படைக்கும் காலமிலை
என்றே நினைப்பார் நொய்ம்மையுளார்;
வீறு படைத்த மாஞானி,
விமலம் சேரும் திருவுளத்தான்;
ஈறு படையா இன்பத்தான்
ராம்கு மார்பால் எய்துமினே. 151

துகள் இல் - குற்றம் இல்லாத. நொய்ம்மை உளார் - சிறிய குணம் உடையார்.

இன்சொல் லாளன், வந்தவர்பால்
இளைய குழந்தை எனஇருப்பான்;
வன்சொல் பேசும் வகையறியான்;
மகிழ்ந்து மகிழ்ந்து சிரிக்கின்றான்;
நன்சொல் எல்லாம் உபதேசம்;
நாடும் கோலம் திருமூர்த்தி;
பொன்செய் வானும் போல்கின்றான்,
பூபன் ராம சுரத்குமார். 152

பொன் செய்வான் - இரசவாதத்தால் பொன்னை உண்டாக்குபவன்.

கல்லைக் கனியாய்ப் பிசைகின்ற
கருணை யாளன்; உளத்தகத்தே
மல்லைச் செய்யும் குணங்களெல்லாம்
மடித்து சாந்தி யுறவைப்பான்;
தில்லைக் கண்ணே ஆடுகின்ற
தேசன் போலச் சிரிக்கின்றான்;
எல்லை இல்லாப் புகழுடையான்
ராம் சுரத்கு மார்யோகி. 153

மல் - போர்.

### (எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

வேதனைகள் போக்குதற்கே எண்ணம் கொண்டால்
 வீறுகின்ற மாயையினை ஒழிக்க வேண்டின்
சாதனைகள் புரிவதற்கே நெஞ்சம் கொண்டால்
 சாந்தியிந்த உலகத்தில் எய்த வேண்டின்
போதமுறும் பெருவாழ்வில் புகநீர் வேண்டின்
 புத்தமைதி காணுதற்கே எண்ணம் கொண்டால்
நாதனிவன் ராமசுரத் குமார்தன் மாட்டே
 நணுகிடுமின்; உள்ளமெலாம் அமுதம் சேரும். 154

போதம் - ஞானம்.

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கி
 எந்நாளும் நெஞ்சமெலாம் புண்ணாய்ப் போக
மண்ணுளும் வாழ்வினிலே ஏது கண்டீர்?
 வானவரும் காணாத இன்பம் காணத்
திண்ணுளும் நெஞ்சமுளார் வந்து போவார்;
 திருவடியை வணங்கிநலம் பெற்றே சேர்வார்;
கண்ணுளன் ராமசுரத் குமார யோகி
 கழலடியே தஞ்சமென வந்தார் நல்லோர். 155

மாயையெனும் பாம்பினையே மடியச் செய்வான்;
 மாமோகம் எனும்பேயை மடித்து நிற்பான்;
தூயவர்கள் நெஞ்சகத்தில் கோயில் கொள்வான்;
 சுகசொருபம் ஆகியே எங்கும் நிற்பான்;
தாயனையான்; தந்தையினைப் போல உள்ளான்;
 தாழ்வார்க்குப் பால்தந்தே நலங்கள் செய்வான்;
நாயகனும் ராமசுரத் குமார ஞானி
 நளினஅடி தஞ்சமென்றே புகுவார் நல்லோர். 156

அருணைநகர் தனில்வாழும் அரனார் வாழி!
அவன்புடைசேர் என்னம்மை என்றும் வாழி!
கருணைமிகும் முருகேசன் கழல்கள் வாழி!
கார்சுரந்த கருணையொடும் அன்பர்க் கெல்லாம்
தெருள்சுரக்கும் ராமசுரத் குமார்தான் வாழி!
திண்ணமுறும் நெஞ்சகத்தோ டவன்பால் சென்றே
அருள்நயக்கும் அன்பரெல்லாம் வாழி வாழி!
அகிலாண்டம் யாவையுமே வாழி வாழி! 157

## [28-11-79 அன்று பாடியவை.]

### (அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

காமம் அகற்றும் திருவுளமும்
கசடு நீக்கும் திருமொழியும்
சேமம் பயிலும் நற்பண்பும்
சிவமே பயிலும் திருவுருவும்
நாமம் ராம சுரத்குமார்
என்னும் நலமும் நயக்கின்ற
பூமன் அருணை நகரினிலே
பொலிந்தான் வந்து வணங்குமினே. 158

கசடு - குற்றம். சேமம் - பாதுகாப்பு.

பாகை அணிந்த திருத்தலையான்;
பல்கால் சிரிப்போ மிகமுழங்கும்
ஏகன்; மூவா நிறைதாடி
இலங்கும் பெருமான்; எந்நாளும்
சோகம் தீர்க்க வல்லவனும்
தூயன்; அடியார் பாலருளும்
தாகன், ராம சுரத்குமார்
தானை வந்து சாருமினே. 159

பாகை - தலைப்பாகை. மூவா - மூப்பில்லாத. தாகன் - வேட்கை உடையவன்.

எண்ணத் தொலையாக் கவலையெலாம்
எய்தி மயங்கி இவ்வுலகில்
நண்ணற் கரிய இடையூற்றில்
நலியும் அன்பீர், இவண்வம்மின்;
பெண்ணிற் கரிய இடம்கொடுத்த
பெம்மான் அருணைத் திருநகரில்
வண்ணப் பணிக்கும் ராமசுரத்
குமரன் தாளை வணங்குமினே. 160

வண்ணப் பணிக்கும் - இனிமையுற அருளும்.

மோனத் திருக்கும் திருவுளத்தான்;
முத்தர் போற்றும் பெரும்புகழான்;
ஞானத் தெளிவை மிகப்பெற்றான்;
நான்என் பதனை அறவொழித்தான்;
ஈனத் திறமே இல்லாதான்;
இலகும் அருணை மாநகரில்
சானத் திருப்பான், ராமசுரத்
குமாராம் தவனை மேவுமினே. 161

சானத்து - தியானத்தில். தவன் - தவமுனிவன்.

சொல்ல வொண்ணாப் பெரும்புகழான்;
துன்ன வொண்ணா மகிமையினான்;
வெல்ல வொண்ணாப் பொறிகள்எலாம்
வென்ற தீரன்; அருணையினில்
நல்லர் வணங்க இருக்கின்றான்;
நாமம் ராம சுரத்குமார்;
அல்லல் களைய அவன்முன்னே
அடைமின்; என்றும் இன்பம்வரும். 162

காலம் எண்ணிக் கவலையிலே
கவிந்து வாழும் மக்களெல்லாம்
காலை வணங்கி மனச்சாந்தி
கவினப் பெறுகின் றூர்களால்;
சீலம் மிகவும் உடையபிரான்;
திருப்பேர் ராம சுரத்குமார்;
ஏல வந்தே அவனடிக்கீழ்
இறைஞ்சி வாழ்மின்; துன்பறுமே. 163

ஐந்து பொறியால் மனம்அலைந்தே
அகன்ற நிலத்தில் அவாவிரியச்
சிந்தும் வாழ்நாள் போகாமே
சிலநா ளேனும் அருள்எண்ணம்
வந்து செறிய ராமசுரத்
குமார்தன் மலர்த்தாள் வணங்கிநின்றூல்
பந்தம் அறுமே; பாசவினை
பாறும்; ஈது திண்ணமரோ. 164

காயும் கனியும் உண்டுவனம்
கவின இருந்தே யோகுபயின்
றேயும் யோகர் பலரிருந்தார்
என்றூல் அவர்போல் நாமிருப்பது
ஆயும் அளவோ? ஆதலினுல்
அடியேன் சொல்வேன்: அருளையினில்
மேய ராம சுரத்குமார்
விளங்கு கின்றூன்; சாருமினே. 165

புண்ணுய் நெஞ்சம் ஏமாந்து
போகும் மனிதர் பலருண்டே;
அண்ணுந் திருப்பார்; அவாஅறுக்கா
தனைத்தும் வேண்டும் எனச்சொல்வார்;

நண்ணூர் பாலே அஞ்சுகின்றூர்;
நாதன் ராம சுர்த்குமார்
அண்ணல், என்றே வந்தடைந்தால்
அல்லல் எல்லாம் தீருமரோ. 166

ஞானம் தன்னை நனிஉரைப்பான்;
ஞாலத் தாசை போக்குதற்கே
ஈனம் இல்லா வழிகாட்டி
இசைப்பான் நல்ல மந்திரத்தை;
மோனம் பயிலான் ஆனலும்
மோன நிலத்தில் இருக்கின்றான்;
ஆன ராம சுரத்குமார்
அவனைப் பணியின் நலமுறுமே. 167

இராமன் பாதம் எந்நாளும்
இறைஞ்சி உள்ளத் தமைத்துள்ளான்;
பராவும் அவன்சீர்த் திருநாமம்
பாடிப் பாடிப் பரவுகின்றான்;
அராவும் அரமாய்க் கன்மவினை
அடர்தல் போக்கி அருள்செய்வான்;
தராத லத்தில் ராமசுரத்
குமாரைச் சார்ந்து நலம்கொள்வீர். 168

அடர்தல் - சேர்ந்து துன்புறுத்தல்.

பாட்டைக் கேட்பின் மிகஉகப்பான்;
பாலைத் தந்தே உபசரிப்பான்;
ஏட்டில் எழுதாப் பெருஞ்சீரான்;
எல்லாத் துன்பும் களைகின்றான்;

நாட்டில் நகரில் மனிதரெலாம்
நண்ணி வணங்கித் துதிக்கின்றார்;
ஆட்டம் ஓய மனம்சிறக்க
அவன்பால் வந்து சாருமினே. 169

குழந்தை போலச் சிரிக்கின்றான்;
கோலா கலமாய் நடிக்கின்றான்;
தொழுந்தெய் வம்போல் தூயனெனத்
தோற்றம் தன்னில் இருக்கின்றான்;
செழுமெய்ஞ் ஞானத் திருவுருவாய்த்
திருவா ரருணை உறைகின்றான்;
தொழுங்கை யோர்கள் தமக்கன்பன்,
தூய ராம சுரத்குமார். 170

வேதம் அறியோம், ஆகமங்கள்
விளங்க அறியோம், நூலறியோம்,
போதம் அறியோம், ஞான நெறி
புகுத அறியோம் என்பார்கள்;
நாதன் ராம சுரத்குமார்
நளின அடியைச் சேர்ந்துவிட்டால்
சீத அருளைப் பெறுவார்கள்;
சினம்போய் மோன நிலைபெறுவார். 171

(தரவு கொச்சகக் கலிப்பா)

ஆங்கார மதையடக்கி ஐம்புலனைச் சுட்டெரித்தே
பாங்காரும் மோனநிலை படர்வதற்கே எண்ணினிரேல்
தேங்கார்வ முடன்அருணை சேர்கிற்பீர்; அவ்விடத்தே
யாங்காணும் ராமசுரத் குமார்தன்னை எய்துவிரே. 172

ஞானத்தால் தவத்தாலே நாடரிய முயற்சியெலாம்
கானத்தால் கண்டிடலாம், கவினுறலாம் என்பானல்,
ஈனத்தே நெஞ்சுபுகா இயல்பினன், அருணையினில்
கோனுற்றான் ராமசுரத் குமாரென்னும் யோகியே. 173

ஆணவத்தை மிகஅடக்கி அவித்தையினை நீருக்கி
மாண்அவத்தை யாவையுமே மாண்டிடவே மேல்போனுர்
காணலுற்ற பொருளெதுவோ அதுவேதான் கண்டிடுவான்
பேணலுற்ற ராமசுரத் குமாரரென்னும் பெரியவனே. 174

மந்திரங்கள் வேண்டா; மதிவேண்டா; எழுத்தணிந்த
எந்திரங்கள் வேண்டா; இசைவேண்டா; பற்பலவாம்
தந்திரங்கள் வேண்டாமல் சாரும் அருளணையினில்
வந்தபிரான் ராமசுரத் குமார்பாலே வந்தணைமின். 175

சிவபூசை செய்வார்கள் சேருகின்றுர் அவன்பாலே;
நவமான யோகியர்கள் நாடுகின்றுர்; ஞானியரும்
தவயோகி மற்றிவனே சரணும்என் றணைந்தனரால்;
குவையாரும் தயையுடையான் ராமசுரத் குமார்யோகி.

என்னுள்ளே எண்ணெயென இருக்கின்றுன் இறைவனென
அள்ளும் கவிஞரெலாம் அன்றுரைத்துப் போயினுர்;
மெள்ளமெள்ளக் காண விழைவுற்றேம்; காணரியோம்;
நள்ளரிய ராமசுரத் குமார்பாலே நண்ணுமினே. 177

கானத்தால் - இறைவனைப் பாடும் இசையால், அள்ளும்-நெஞ்சை அள்ளும்.

**(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)**

ஆனந்த அறிவாகி அனைத்து மாகி
ஆகமமாய் வேதம்சொல் கருத்து மாகித்
தானந்த மில்லாத பொருளு மாகிச்
சராசரங்கள் எல்லாமாய் யோக மாகி
வானந்த மாயஐம் பூத மாகி
மதியாகிக் கதிராகி அங்கி யாகி
தான்தானு யுள்ளஅந்தப் பெருமான் தன்னைச்
சார்ராம சுரத்குமார் உருவில் கண்டேன். 178

வான் - ஆகாசம், மதி - சந்திரன், கதிர் - சூரியன், அங்கி - அக்கினி.

ஓங்காரத் தனிப்பொருளாய் உற்ற ஐயன்,
உலாவருநல் மயில்மேலே போந்த கந்தன்,
தேங்கார்வ முடன்போற்றும் அன்பர்க் கெல்லாம்
திருவருளைச் செய்கின்ற தீரன், அன்று
தாங்கார்வ முடன்சீதை தனைமணந்த
சச்சிதா னந்தனென யாரும் போற்ற
ஓங்காநின் றுன்நல்ல அருணை தன்னில்
உறுகின்ற ராமசுரத் குமாரன் தானே. 179

வழக்கெல்லாம் தீர்க்கின்ற வகையைப் போலே
மனம்அலைச்சல் படுகின்ற வண்ணம் நீங்கி
இழுக்கறவே நிற்பதற்காம் வழியைச் சொல்லி
எஞ்ஞான்றும் உபசாந்த நிலையை மேவச்
சழக்கறுக்கும் பதம்வரவே சாற்று கின்றான்;
சச்சிதா னந்தந்தான் காட்டு கின்றான்;
அழுக்கறுக்கும் மாயோகி, அருணை தன்னில்
அவிர்ராம சுரத்குமார் அண்ணல் தானே. 180

காலமெலாம் காத்திருந்தும் கருணை செய்யாக்
கடவுளர்கள் பலருள்ளார்; அவரை நாடிச்
சாலநனி பத்திசெய்து துதிகள் பாடிச்
சார்ந்தாலும் பயனில்லை என்பார் பல்லோர்;
சீலமுறும் அருணைதனில் இருக்கும் ஐயன்
திகழ்ராம சுரத்குமார் தன்பால் சென்மின்;
ஓலமிடும் துயரமெலாம் போக்கு கின்றான்;
உயர்சாந்தி அடைவதற்கு நெறிசொல் வானே. 181

அழுக்குடையான் ஆனாலும் அழுக்கே இல்லான்;
அருமேனி புனல்படியான்; ஆனால் தூயன்;
இழுக்குடைய மாந்தர்தம் நெஞ்சம் எல்லாம்
இழுதுபோல் உருக்குகின்ற நேயன்; என்றும்

பழுக்கின்ற கனிபோலக் கசியும் நெஞ்சன்;
பார்வையிலே ஒளிவைத்துப் பார்க்கும் ஐயன்;
ஒழுக்கமிலா வன்பரெலாம் தூற்று கின்ற
ஒருவன்தான் ராமசுரத் குமாராம் அண்ணல். 182

அழுக்கு உடையான் - அழுக்கேறிய உடையை அணிந்தவன். இழுது - நெய். வன்பர் - கொடியவர்.

பலகாலும் பயின்றாலும் நெஞ்சந் தன்னைப்
பலவாறே அலையாமல் அடக்கு தற்கு
நிலைகாணேம் எனஅஞ்சி மாழாந் தென்றும்
நினைந்துநினைந் திடர்கொண்ட நண்பீர், வம்மின்;
அலகேதும் இல்லாத கருணை யாளன்,
அவன்ராம சுரத்குமார் என்னும் அண்ணல்;
சிலகாலம் கண்டீரேல் சாந்தி தந்தே
திகழ்விப்பான்; இதுதிண்ணம் திண்ணம் கண்டீர். 183

மாழாந்து - மயங்கி. அலகு - அளவு.

கானத்தை மிகவிரும்பிக் கேட்பான்; நல்ல
கவிகளையே பாடுங்கால் உருகி நிற்பான்;
பானத்தைப் பாலினையே வருவார்க் கெல்லாம்
பணிந்தருந்தி மிகவுகக்கும் செல்வன் கண்டீர்;
ஞானத்தை இவன்பாலே பெறலாம் என்று
நண்ணுவார் தமக்கினிய அருள்செய் கின்றான்,
ஈனத்தைப் போக்குகின்ற பெரிய யோகி
இவன்ராம சுரத்குமார் என்பான் கண்டீர். 184

மாற்றறியாப் பசும்பொன்னே, மணியே என்று
வந்தஅன்பர் புகழ்கின்ற அண்ணல், என்றும்
தேற்றறியா மனமதனில் சாந்தி மேவச்
சிலசொல்லும் பேராளன், ஞான மூர்த்தி,

தூற்றறியான், கவலையெனச் சொல்லு கின்ற
தொண்டருக்குக் கவலையெலாம் தீர்த்து வைப்பான்;
சீற்றமிலான்; சாந்தமெனும் நிலத்தில் செல்லும்
சீர்ஞானி ராமசுரத் குமார்தான் அன்றோ? 185

தேற்று அறியா - தெளிவை அறியாத. தூற்று - பிறரைத் தூற்றும் வசை.

பண்ணாத பெருந்தவத்தைப் பண்ணி னாலும்
பாசமெனும் வலையைநனி அறுக்க லாமோ?
கண்ணாரும் ஒளிகொண்ட கருணை வள்ளல்,
கவின்சேர்ந்த இன்சொல்லான் குருவை நாடி
அண்ணல்என் றவனடியே இறைஞ்சி வீழ்ந்தால்
அப்போதே மலமெல்லாம் அறுந்து போகும்;
விண்ணாளும் கீர்த்தியுடை அருணை மேவும்
வியன்ராம சுரத்குமார் பாலே சென்மின். 186

கவின் - அழகு.

தேனாகித் தேனுள்ளே சுவையு மாகிச்
சித்தத்துள் தித்திக்கும் அமுது மாகி
வானாகி மண்ணாகி வளியு மாகி
மற்றுள்ள பூதமாய் வயங்கு வானைத்
தானாகிக் காட்டுகின்ற தன்மை யாளன்,
சராசரத்தின் உயிராகிச் சார்ந்து நிற்பான்;
ஊனாகி உயிராகி இருக்கும் அண்ணல்,
உயர்ராம சுரத்குமார் அவனே கண்டீர். 187

வளி - காற்று. ஊன் - உடம்பு.

அத்துவிதச் செம்பொருளை ஆனந் தத்தின்
அருட்கடலை மெய்ஞ்ஞான மாய குன்றைத்
தத்துவத்தின் வடிவதனைச் சாந்த மென்னும்
தரையினிலே நடமாடும் பெரிய கோவைச்

சத்துவத்தின் தனியுருவை யோக மென்னும்
தனிநிலையின் உச்சியினில் நிற்பான் தன்னை
இத்தரையில் ராமசுரத் குமாராய் நிற்கும்
இவனைநண்ணிக் கண்டவர்கள் இன்னல் தீர்வார். 188

எந்நாளும் எவ்விடத்தும் இருக்கின் றானை
எள்ளுளெண்ணெய் போலிருப்பான் என்பார் நல்லோர்;
முன்னாளும் பின்னாளும் கடவுள் தன்னை
முயற்சிசெய்து கண்டவர்கள் சிலபேர்; அன்னார்
நன்னாளில் குருவருளால் நலம்பெற் றார்கள்;
நானிலத்தில் ராமசுரத் குமார்பால் சென்றே
இன்னாத நீக்குகின்றார் எவரோ அன்னார்,
இந்நிலத்தில் மெய்ச்சுகத்தை எய்து வாரே. 189

பெண்ணாகி ஆணாகி அலியு மாகிப்
பிறங்குகின்ற குழந்தையாய்க் கிழவன் ஆகி
விண்ணாகி மண்ணாகிக் காற்று மாகி
வியன்நீராய் வெளியாகி நிற்பான் தன்னை
உண்ணாடும் யோகியர்கள் காணும் சோதி
உருவானை அருணைநகர் வீற்றி ருக்கும்
கண்ணானை ராமசுரத் குமாரைக் கண்டார்
கலியுகத்தில் மெய்யின்பம் காண்பார் தாமே. 190

(வேறு)

ஆசையெனும் வலையறுத்தால் அப்பொழுதே ஞானம்
அடையலாம்; ஆதலினால் அன்பர்காள், இங்கே
மாசுடைய மனமெல்லாம் தூயதென ஆக
வந்தணைவீர்; அவாவறுக்கும் வழியினையே காண்பீர்;
தேசுடைய முகமுடையான், கண்ணொளிசேர் செல்வன்;
சீர்ராம சுரத்குமார் இருக்கின்றான், அருணை
வீசுபுகழ்ப் பெருநகரில்; எல்லோரும் வம்மின்;
வினையறுத்தே சாந்திநிலை கண்டிடலாம் பாரீர். 191

## (அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

எண்ணத் தொலையாப் பேரின்பம்
எங்கே என்று தேடுகின்றார்;
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்
படைக்க மிகவும் முயல்கின்றார்;
கண்ணின் மணியாய் அருணையினில்
கவின்றார் ராம சுரத்குமார்
அண்ணல் தன்னைப் பணிமின்கள்
ஆகா தெலாம்போய் நலமுறுமே. 192

பண்ணப் பணைத்த - மிகப் பெருத்த.

சொல்லில் பொருள்போல் மலர்மணம்போல்
தூய நீரில் தண்மைபோல்
இல்லில் கணவன் மனைவிபோல்
இலங்கும் சிவனும் சக்தியுமே
நல்ல படியே அருள்பொழிய
நண்ணும் ராம சுரத்குமார்
வல்லன், எல்லாம் வல்லசித்தன்.
மலர்த்தாள் அடைந்தால் நலம்பெறுவீர். 193

ஒன்றே நினைமின், ஒன்றையே
உள்ளத் தடைத்தே உறுதிசெய்ம்மின்;
ஒன்றே என்றும் உரைசெய்மின்;
ஒன்றே செய்து நலம்பெறுவீர்;
ஒன்றே என்ன உறுபொருளை
உறலாம் என்பான், அருணையினில்
ஒன்றே காணும் ராமசுரத்
குமார்என் னும்பேர் உள்ளவனே. 194

தாய்போல் பாலை அருத்திடுவான்;
தந்தை போல இனியசொல்வான்;
வாயில் சிலகால் சிகரெட்டை
வைத்துக் குடிப்பான்; அன்பர்பால்
நோயில் லாத நலம்தருவான்;
நுட்பம் எல்லாம் இசைக்கின்றான்;
மேய ராம சுரத்குமார்,
மேலா மவனைப் பணியுமினே. 195

அருத்திடுவான் - அருந்தச் செய்வான்.

சேய்போல் சிரித்தே நலம்செய்வான்;
சீரார் வீட்டை இனிதடைய
ஆயா நிற்கும் வழிசொல்வான்;
அனைத்தும் உணர்ந்த மெய்யனிவன்;
நோயே வந்தால் மருந்துரைப்பான்;
நுட்ப மெல்லாம் தானுரைப்பான்;
காயே கனியச் செய்கின்ற
கவிஞர் ராம சுரத்குமார். 196

வீட்டை - முத்தியை.

என்றும் அவியா விளக்கத்தை
இதயத் திருத்த வழிசொல்வான்;
பொன்றும் துணையும் புகழமையப்
புதிய நெறியைத் தான்புகல்வான்;
நன்றெண் ணுதற்கு வழிசொல்வான்;
நரரைத் தேவாய் ஆக்குகின்றான்;
ஒன்றும் ராம சுரத்குமார்
ஒருமா யோகி அருளையிலே. 197

பொன்றும் துணையும் - இறக்கும் வரையும். நரரை - மனிதர்களை.

காலன் வந்தால் மிகஅஞ்சிக்
கண்ணீர் ததும்ப நிற்கின்றோம்;
சீலன் இவன்பால் அன்புசெயின்
சிக்கல் தீர வழிபிறக்கும்;
கோலும் ராம சுரத்குமார்
குளிர்தாள் பணிமின்; அருளையிலே
சாலும் அன்பர் வணங்குகின்ற
தயவார் அண்ணல் இருப்பானே. 198

அண்ணா மலையில் கோபுரம்போல்
அதன்பின் மலைபோல் தவமலையாய்
நண்ணா தாரும் பணிகின்ற
நயத்தைக் காட்டி இருக்கின்றான்;
திண்ணார் நெஞ்சம் கொண்டபிரான்,
சீலம் மிகவும் உடையஅண்ணல்,
செண்ணார் ராம சுரத்குமார்.
சிவயோ கத்தின் செல்வமே. 199

நண்ணாதாரும் - பகைவர்களும். செண் - செம்மை.

மோனம் என்னும் இராச்சியத்தின்
முழுதாம் உரிமை படைக்கின்றான்;
ஞானம் என்னும் பெருநிலத்தில்
நல்ல அரசாய் இருக்கின்றான்;
தீனர் வந்தால் அவர்தம்மைத்
திகழ உயர்த்தி விடுகின்றான்;
ஆன அருளான் ராமசுரத்
குமாராம் அரிய யோகியரோ. 200

தீயால் பஞ்சு முழுதெரியும்;
சினத்தால் நல்ல குணம்போகும்;
ஆயால் பசிதான் நீங்கிவிடும்;
அருளால் வினைகள் எவையும்போம்;
மாயை தன்னால் அறிவழியும்;
வந்தார் மாட்டே நலமெல்லாம்
மேய அருள்செய் ராமசுரத்
குமார்பால் வந்தால் வினையறுமே.

ஆயால் - தாயினால்.

கல்லும் உருகக் கண்ணொளியால்
கனிந்தே அருளைக் காட்டுகின்றான்;
சொல்லில் அன்பு கலந்துசுவை
துன்னச் செய்யும் சீலனிவன்;
அல்லல் நீக்கும் ஒருநாதன்,
அவலம் நீக்கும் பெருநாதன்;
மல்லல் உடைய ராமசுரத்
குமாராம் மாண்பார் யோகியரோ.

துன்ன - சேர. மல்லல் - பெருமை.

அஞ்சக் கரத்தான் இவனென்பார்
ஆறக் கரத்தான் இவனென்பார்;
கஞ்சக் கரத்தான் இவனென்பார்,
கதிரோன் இவனே என்பார்கள்;
நஞ்சக் கழுத்தான் இவனென்பார்;
நாதன் இவனே என்பார்கள்;
எஞ்சற் கில்லை ராமசுரத்
குமாரின் புகழுக் கெல்லையுண்டோ?

அம் சக்கரத்தான் - அழகிய சக்கரத்தை உடைய திருமால். கரத்தான் - முருகன். கஞ்சக் கரத்தான் - தாமரைக் கோயிலில் பிரமன்.

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

திருவாளன் ராமசுரத் குமார்சீரைப் பேசுதற்குத் [டோ?
தினந்தினமும் முயன்றாலும் அதற்கெல்லை தானுண்
பெருமால்கொள் உலகத்தில் மாயையிலே மிகச்சிக்கிப்
பேதைமையில் நின்றிருக்கும் மனிதர்காள், யாவருமே
உருமாலை தலைக்கணியும் ராமசுரத் குமார்பாலே
உற்றிடுவீர், ஞானமெனும் உருவதனைக் காண்பீர்கள்;
திருநாமம் ஒருகாலே சொல்லிடினும் நலமாகும்;
திகழஇங்கே அணுகுவீர்; உபசாந்தி பெறலாமே. 204

மால் - மயக்கம். உருமாலை - குமால் என்னும் துணியை.

(வேறு)

திருவருணை நகர்வாழி! தேசு பூண்ட
சிவபெருமான் அருள்வாழி! அன்பர் வாழி!
மருவுகின்ற ஞானஉரு வாகி நின்ற
வள்ளலாம் ராமசுரத் குமார யோகி
பெருநாமம் மிகவாழி! தொண்டர் வாழி!
பேசுகின்ற மொழிவாழி! அன்பர் வாழி!
வருவார்கள் மிகவாழி! மறையும் வாழி!
வையகத்தார் எலாம்வாழி! வாழி! வாழி! 205

[22-11-79 கடிதப்பாட்டு]

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

ஓம்என னும்பெரு மந்திரத் துட்பொருள்,
உயர்மறை உறைபொருளாம்
நாம மின்றியே பற்பல நாமங்கள்
நண்ணிய பரம்பொருள்எம்

சேம மாகிய மெய்ப்பொருள் தன்னையே
சிந்தைவைத் துயர்யோகி
ராம்சு ரத்குமார் அடியிணை பணிபவர்
இருநிலத் துயர்ந் தோரே. 206

## [14-12-79 அன்று பாடியவை]

முடிவளர்ப்பார், தாடியினைமுற்றுமேவளர்ப்பார்; [பார்;
முடிமழித்தே மொட்டையுடைத் தலையுடனே இருப்
செடிவளர்த்தல் போல்கேசம் படர்தரவே காண்பார்;
சிலகாலம் கண்மூடி யோகியென இருப்பார்;
குடிவளர்த்த உடலிதனைக் கோணலா யாக்கிக்
கூடுவார் அதிசயிக்க வித்தைகாண் பிப்பார்;
மடிவளர்க்கும் பிறவியற வழியறியார் போலே
வாழகிலான், பெருஞானி ராமசுரத் குமாரே. 207

மழித்தே - களைந்து.

யாவர்க்கும் இன்சொல்லே பேசுகின்றான்; சேய்போல்
இடியிடியென் றேசிரிப்பான்; நான்பாவி என்பான்;
சீவர்களில் நான்இழிந்தோன் எனப்பணிவு பேசிச் [டித்
சேர்வாருக் கடக்கமெனும் பெருங்குணத்தைக்காட்
தேவர்க்கும் தேவனிவன் எனஅறிந்தோர் உணரும்
செம்மலிவன், ராமசுரத் குமார்என்னும் நாமம் [ளான்;
ஏவர்க்கும் சொலக்கொண்டான்; பெருமையெதும்கொள்
இவன்மாட்டே ஞானஒளி வீசுகின்ற தம்மா! 208

காலத்தை நாம்கொல்லா விட்டால்அக் காலம்
கடிதினிலே கொன்றுவிடும்; ஆதலினால் இந்த
ஞாலத்தில் பிறவியினில் தெய்வநலம் பேசி
நாள்நாளும் கழிப்போமேல் அக்காலம் நமக்குச்

சீலத்தை ஞானத்தை அடையவழி கோலும்,
செம்மைநெறி இதுவென்றே காட்டியருள் கின்றான்;
ஆலத்தை அமுதாக்கும் அரன்வாழும் அருணை
யாம்பதியில் எழுந்தருளும் ராமசுரத் குமரன். 209

வானத்தைஆடையெனமடிப்பதற்கு வழியை [நோயாம்
வகுப்போம்என் றுரைத்திடுவார்; வந்தவர்தம்
ஈனத்தைப் போக்கிடுவோம் என்றிறுமாந் துரைப்பார்;
எல்லாரும் தம்மடியில் விழவேண்டும் என்பார்;
ஞானத்தைச் சிறிதறியாப் போலிகளை நண்ணி
நம்பிக்கை மிகவைத்தே ஏமாந்தார் பல்லோர்;
கானத்தை மிகவிரும்பி இராமனெனும் நாமம்
கவினுறவே சொல்ராம சுரத்குமார் நல்லோன். 210

ஆத்திரத்தை அடக்குதற்கு வழியறியார்; நாமே
அருள்வழங்கி நோய்தீர்ப்பம் வம்மின்கள் என்பார்;
சாத்திரத்தை மிகவிரித்து விளக்கியுரை செய்வார்;
சத்தியமே உரைக்கின்றோம் எனத்தாமே மொழிவார்;
காத்திரத்தைப் பிரித்துயிரைக் கொள்ளவரும் காலன்
கைப்படியும் காலத்தே மாண்டுவிடு வார்கள்;
தோத்திரத்தை விரும்புகின்ற அவர்போலே யன்றித்
தூயபெரு ஞானியாய் ராமகுமார் இருப்பான். 211

அளப்பரிய வார்த்தைகளை அலுப்படையப் பேசி
அடைவாரைப் பேச்சினிலே மயக்குவார் பல்லோர்;
உளத்தினிலே அவாவினையே உள்ளடக்கி வைத்தே
ஒருபொருளும் யாம்வேண்டேம் எனச்சொல்லிநிற்பார்

வளப்பெருமைமிகவேண்டிப் பலரையன்பராக்கி [போல்
மமதையினை அகந்தையினை வளர்த்துநிற்பார்; அவர்
களக்கமுறு நிலைஇல்லா மெய்ஞ்ஞானி அருணைக்
கண்திகழும் ராமசுரத் குமார்என்னும் யோகி. 212

மழைபெய்யும் போதுட்டலம் நனைந்துதண்மை யேறும்
வண்ணம்போல் இவன்முன்னே வந்தமர்ந்தால்உள்ளம்
விழைகின்ற அவாஅடங்க மோனநிலை தன்னை
மேவுகின்ற பதம்அறிவோம்; கைகளைத்தான் பற்றித்
தழைகின்ற அன்புடனே விழியிணையை மூடித்
தாய்போல நலம்செய்யும் ராமசுரத் குமாரை
விழைமின்கள்; அவன்இயல்பை மெய்யாக உணர்மின்;
மெய்ஞ்ஞான உருவென்னும் உண்மையினைக் காண்பீர்.

ஆலத்தை அமுதாக்கும் வண்ணம்இது என்கோ?
அயத்தினையே பொன்னுக்கும் ரசவாதம் என்கோ?
ஞாலத்தின் அழுக்கெல்லாம் போக்குகின்ற கங்கை
நதியென்கோ? மெய்ஞ்ஞானக் குன்றினிலே இவர்ந்து
சீலத்தைக் காட்டுகின்ற கதிரவனே என்கோ?
சிரிப்பென்னும் நிலவுபொழி தண்மதியம் என்கோ?
சாலத்தான் இதுவென்று வரையறைசொல் லாத
தன்மையினன் ராமசுரத் குமாராகும் யோகி. 214

ஆணவத்தைப் போக்கிடலாம்; அன்பென்னும் கடலில்
அழுக்கெல்லாம் போகும்வணம் ஆடுதலும் ஆகும்;
கோணலுற்ற நெஞ்சம்நிமிர் கொள்கையினைப் பெறலாம்;
கூட்டத்தில் இருந்தாலும் மோனநிலை உறலாம்;
வீணரைப்போல் உழலாமல் மெய்ஞ்ஞான மென்னும்
மேனிலத்தில் சாந்தியினைத் தழுவிடலும் ஆகும்;
காணலுற்ற உருவோடே ராமசுரத் குமார்தான்
காட்சிதரு கின்றான்அண் ணமலையில் அன்றே. 215

ஆழியென ஆழத்தைக் காணலரும் ஞானி;
ஆதாரம் ஆறினையும் கடந்துணரும் யோகி;
சூழுமகங் காரமெனும் பேயினையே அடக்கித்
தூயனென நிலவுகின்ற மந்திரத்தைக் கற்றேன்;
வாழும்வகை இதுவென்ன வகுக்கின்ற குரவன்;
மாயையெனும் பாம்பின்விடம் போக்குகின்ற அமுதன்;
தாழுமவர்க் கருள்புரியும் தண்மைஒளிர் கண்ணன்;
சால்புடைய ராமசுரத் குமார்யோகி வாழி! 216

# திருவண்ணாமலை யோகி ஸ்ரீ ராம்சுரத்குமார் அவர்களின் ஜயந்தி மலர்

ஜயந்தி மலர் என்றால் பிறந்த நாளின் தொடர்பாக வெளியிட்ட கதம்ப நூலோ என்ற ஐயம் தோன்றக் கூடும். பிறந்த நாள் அன்று மலர்ந்த நூல் என்பது இதன் பொருள். அறிவுச் செம்மல் திரு. கி. வா. ஜ. அவர்கள் திருவண்ணாமலையில் ஞான தீபமாக விளங்கும் ஓர் மகானின் 60-ஆம் ஆண்டு நிறைவு விழாவன்று 1—12—78 இல் அம்மகானுடைய வரலாற்றைப் பற்றித் தக்க ஆதாரங்களுடன் எழுதியுள்ள நூல் இது. வரலாறு உரைநடையில் 36 பக்கங்களில் அமைந்துள்ளது. இவரே துறவியைக் கண்டவுடனே உணர்ச்சி வயப்பட்டு வாய் மொழியாகப் பாடிய பல பாடல்கள் பதிவு செய்யப் பெற்றவையும் இந்நூலை உருவாக்கும் போது சேர்த்தவையும் (154 பாடல்கள்) இப்புத்தகத்தில் உள்ளன. பாடல்களின் போக்கு, கருத்தின் அமைப்பு எல்லாம் பழங்காலப் பக்திப்பாடல்களின் மாதிரியில் அமைந்துள்ளன. துறவிகள் போன்ற பெரியாரின் தரிசனத்தால் விளையும் நன்மைகள் பல. அவர்களைப் பற்றிய உயரிய பண்புகளை அறிவாரும் தூயராவர். இதற்கு இப்புத்தகம் ஓர் எடுத்துக்காட்டு.

—*தினமணி : 16-9-1979.*

ஸ்ரீ ரமண மகரிஷியினிடம் ஈடுபாடு கொண்டு திருவண்ணாமலையைத் தேடிவந்த மகான்களில் ஒருவர் யோகி ஸ்ரீ ராம்சுரத்குமார் அவர்கள். குழந்தை போன்ற கள்ளங்கபடற்ற சுபாவமுள்ளவரும், காஷாயம் தரிக்காமலேயே ஜீவன்முக்த நிலையில் இன்றும் அந்தத் தலத்தில் விளங்கி வருபவருமான இந்த மகாபுருஷரின் செயல்கள் நம் போன்ற சாதாரண மக்களுக்குச் சில சமயம் புரியாமல் இருந்தாலும், அழுக்குடை அணிந்தும் தூய்மையே உருவாக விளங்கும் இவரைத் தரிசித்த மாத்திரத்தில் ஓர் அமைதி நம் உள்ளத்துக்குக் கிட்டுகிறது எனத் 'திருவண்ணாமலை யோகி ஸ்ரீ ராம்சுரத்குமார் அவர்களின் ஜயந்தி மலர்' என்ற இதனை எழுதித் தந்துள்ள வாகீச கலாநிதி ஸ்ரீ கி. வா. ஜ. அவர்கள் பக்தி பரவசத்தால் கண்ணார நீர் மல்கிடத் தெரிவித்துள்ளார். இதனை மெய்யன்பர்கள் படித்து நலம் பெறுவார்கள் என்பது திண்ணம்.

—*மஞ்சரி : 1-4-1979.*

கிடைக்குமிடம்:

**காந்தமலை, நார்ட்டன் முதல் தெரு, சென்னை-28.**